


| சிலம்பு ௩௨ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, தை பிப்ரவரி, 1958 | பரல் ௬ |
|---|---|---|

# முதலாவது சிற்றிலக்கிய மாநாடு

நாட்டின் நலத்தையும் நல்லொழுக்கப் பண்பினையும் நன்கெடுத்து விளக்குவன நல்லிசைப் புலவர்கள் நவின்றருளிய நயனுர் இலக்கியங்களேயாம். அவ்விலக்கியங்கள் பாட்டளவின் பெருமை சிறுமை பற்றியும், பகுப்புறுப்பின் பெருமை சிறுமை பற்றியும், பேரிலக்கியம் சிற்றிலக்கியம் என்னும் இருபெரும் பிரிவாய் நிலவுகின்றன. அறம் முதலிய நாற் பொருள்களையும் பயப்பன காப்பியங்கள் என்பர். சிற்றிலக்கியங்களைப் பனுவல்கள் எனப் பகர்வர். இவைகளுக்கு வழிவகுக்கும் தொல் இலக்கணம்,

"விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே."
(தொல். பொருள். செய்யுள் - ௨௩௯)

என்பதாம். விருந்து - புதிது, புதிதாகப் பொய்யாநாவிற் புலவர் பெருமக்களால் நலமுறச் செய்யப்படும் செய்யுளைக் குறிப்பதாகும். பிற்காலத்தெழுந்த முத்தொள்ளாயிரம், அந்தாதிச் செய்யுள், கலம்பகம் முதலியன இதன்பாற்படும்.

இதுபோன்று உலாச் செய்யுளும் வழங்குவதாகும். அதற்கும் தொல்காப்பியத்தின்கண் வரும்,

"ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப."
(தொல். பொருள், புறத் - ௩0)

என்னும் நூற்பா விதியாகும். இவ்வுலாவினை ஏழு பருவப் பெண்களும் உலாவரும் தலைவனைத் தனித்தனிக் கண்டு காதல் கொண்டு அவன் தார்மேல் வேட்கையுற்று அதனைப் பெறுமாறு முயல்

வதும், நெஞ்சொடு கூறுவதும், முதலாயின புரிந்தனர் என அமைத்துப் புலவர் பாடுவர். தலைவர்கட்குக் காதலும் காவலும் நீதில் பெருங்கடமை யாகும். காவலைப் புறத்திணை யெனவும் காதலை அகத்திணை எனவும் கூறுவர். புறத்திணைக் கடமையை மேற்கொண்டு அகத்திணை யொழுக்கத்தை எண்ணாது நிற்கும் நிலையில் புலவர்கள் அத் தலைவன் உள்ளத்தினை அகத்திணைப்பாற் செலுத்துவிக்கும் அணியார் கருவியாக உலா நூலினைப் பாடுவாராயினர். அவ்வுலா நூலின்கண் பேசப்பெறும் பெண்டிர் பொதுமகளிரென்று கொள்ளுதலே நல்லொழுக்கப் பண்பிற்குப் பொருந்துவதாகும். இவ்வுண்மை "ஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது" என நச்சினார்க்கினியர் உரைக்கும் உரைப்பகுதியான் உணரலாம். மேலும், உதயணன் நகர்வலங் கொண்ட காலத்து நண்ணி விரும்பிய பெண்கள் பொதுப் பெண்டிரே என்பதும் வரும் பெருங்கதைப் பாட்டான் உணரலாம்.

"உதையண குமரன் வதுவைக் கணிந்த
கோலங் கொண்ட கோல்வளை மகளிருள்
ஞாலந் திரியா நன்னிறைத் திண்கோள்
உத்தம மகளி ரொழிய மற்றைக்
கன்னிய ரெல்லாங் காமன் றுரந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லார் நிறைவரை நெகிழ
நாண்மீ தூர்ந்து நன்னெஞ்சு நடப்பத்
தோண்மீ தூர்ந்து தொலைவிட நோக்கி
அற்றம் பார்க்கும் செற்றச் செய்தொழிற்
பற்றா மாந்தரிற் பசலை பாய்ந்த
கருங்கண் புலம்ப வருந்தின ரதனால்."

(உ. எ - வரி - ௫௧ - ௬௨.)

இப்பொழுது வழங்கிவரும் உலாக்கள் அனைத்திற்கும் முன்னுள்ளதும், உலாப்பாடும் தொடர்நிலை யாப்பிற்கு இலக்கணமா யமைந்ததும், கடவுட் பாங்காயுள்ளதும் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேரமான்பெருமாள் நாயனார் பாடியருளிய "திருக்கயிலாய ஞானவுலா" என்னும் திருமுறையாகும். இவ்வுலா செந்தமிழ்மறை மொழியின் சீர்சிறப்பு விளக்கும் செம்மை சான்றது. உய்யவைத்தரும் தெய்வக் கயிலையின்கண்ணும் பொய்யா விளக்காய் என்றும் நின்று நிலவுவது. எல்லா மொழிக்கும் தாயாய்த் திகழும் தொன்மை இயற்கைத் தண்டமிழ் மொழியே என்பதை எட்டுணையும் ஐயுறவிற்கிடமின்றி எடுத்துக் காட்டுவதாகும்; என்னை? அவ்வுலாத் திருக்கயிலாயத்தின்கண்

சிவபெருமான் திருச்செவி சாத்திட ஆங்குக் கேட்பித்தமையான் என்க. மாதவஞ் செய் தென்னாட்டினுமன்றித் திருக்கயிலாயத் தின்கண்ணும் சிவபெருமான் செந்தமிழையே திருச்செவி சாத்தி 'ஏத்துகந்தான்' எனின் அம் மொழிக்கிணையாக எம்மொழிதான் நிற்கும்? இவ் வுண்மையினை நம்மவர் மனங்கொண்டு இனி யேனும் திருக்கோவில் வழிபாடுகளனைத்தினும் திருமுறைத் திருமாமறையினையே கைக் கொள்வார்களாக.

இத்திருவுலாவின்கண் குறிக்கப் பெறும் பெறற்கரும் பருவப் பெண்கள் எழுவரும் மெய்யடியார்களின் நிலை ஏழினையும் உள்ளுறையாக நின்று உணர்த்துபவராவர். பேணும் நிலையினர் பெண்ணெனற் குரியராவர். அவ் வுண்மை சேக்கிழாரடிகள் ஓதியருளும் "பேணலால் எம்மைப் பெற்றார்" என்னும் திரு மொழியான் உணரலாம். ஆள்கின்றோம் என்னும் ஆண்மை நினைப்பினர் ஆண் எனற்குரியராவர். நம் தெய்வத்தமிழ்மொழி யின் தனி மாண்பு பொருளை யுணர்த்தும் சொல்லின்கண்ணும் பெரும்பான்மையும் விளங்கக் கிடக்கின்றது; என்னை? ஆண் என்னும் சொல் இரண்டு மாத்திரையாகவும், பெண் என்னும் சொல் ஒரு மாத்திரையாகவும் இயற்கையிலேயே அமைந்திருத் தலான் என்க.

ஏழு பருவங்களையும் ஒரு புடையொப்பாக விளக்குங்கால் பேதைப் பருவம் சீல நிலையினையும், பெதும்பைப் பருவம் நோன்பு நிலையினையும், மங்கைப் பருவம் செறிவு நிலையினையும், மடந்தைப் பருவம் அறிவு நிலையினையும், அரிவைப் பருவம் அறிவிற் சீல நிலையினையும், தெரிவைப் பருவம் அறிவின் நோன்பு நிலையினையும், பேரிளம் பெண் என்னும் பருவம் அறிவிற் செறிவு நிலையினையும் குறிப்பனவாகும். சீலம் முதல் நான்கும் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் குறிப்பர். அறிவிற் சீலம் - ஞானத்திற் சரியை, அறிவின் நோன்பு - ஞானத்திற் கிரியை. அறிவிற் செறிவு - ஞானத்தின் யோகம். இம் முத்திறத்து மெய்யடியார்களும் எய்தும் பேறு முறையே சிவனுலகிருத்தல், சிவனண்மையினிருத்தல், சிவனுருப்பெறுதல் என்ப. அறிவின் அறிவாகிய முடிந்த ஞானத்தின் ஞானமாம் பதினாறும் நிலைக்குப் பயன் "மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியே குறுகி" இரண்டறக் கலந்து இறவா இன்பம் எய்துதல்.

இச் சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணங்களாய் அமைந்தன பிற்காலத்தெழுந்த "பன்னிருபாட்டியல், வெண்பாப் பாட்டியல், இலக்கண விளக்கப்பாட்டியல்" முதலியன. இவைகளில் தொண் ணூற்றாறு என்னும் எண்வரையறை பெற்றதற்குத்தக்க சான்று

ஏதும் இன்று. எனினும் எங்ஙனமோ பாவை வழக்காய் வழங்கி வருகின்றனர். இவ் விலக்கியங்கள் வெறுங் கற்பனையுலகக் காட்சிகள் என்று கருதுதல் நன்றாகா. நம் அருந்தமிழ்த் தாய்க்கு அவ்வக்காலங்களில் தோன்றும் புலவர் பெருமக்கள் புதுப்பணி குயிற்றி அணிந்து வணங்கல் அவர்தம் அரும்பெரும் தலைக்கடனாகும் எனக் கொண்டனர் போலும்! அந் நூல்களால் அவ் வக்காலப் புலவர், புரவலர், குறுநில மன்னர், முடியுடை வேந்தர், நாட்டுவளம், நாகரிக மாண்பு, மொழிநிலை, புத்தம் புதிய உவமை, அறமுறை, ஆட்சி வரலாறு, கடவுணெறி முதலியன பல நாமுணர்ந்து நல்வாழ்வு எய்தி இன்புறும் வாயில்கள் நமக்கு அமைகின்றன. தொகை நூல்களின்றேல் பழந்தமிழ்நாட்டு மெய்வரலாறுகள் அறியும் வாயில்கள் இன்றாகும். பேரிலக்கியங்களின்றேல் இடைப்பட்ட கால வரலாறுகள் அறியும் நிலைமையின்றாகும். இச் சிற்றிலக்கியங்களின்றேல் பிற்கால வரலாறுகள் அறியும் பெற்றியின்றாகும்.

இச் சிற்றிலக்கியங்களின் இயல்புகள் முற்றும் தெளிவாக விளங்கிக் கொள்ளவும், ஒவ்வொன்றின் சிறப்புகளை நன்றாகப் புரிந்துகொள்ளவும் நூற்குப் பாயிரமும், ஆய்வுக்குத் துணிவும் போன்று பெருந்துணை புரிவது சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் சேர்ந்த மாநாட்டு வெளியீடாகும். அம்மட்டுமன்று; இக் காலத்து வாழும் பெரும்புலவர்களின் நுண்மாண் நுழைபுலச் செல்வங்கள் பலவும் எண்மையில் நாம் நுகர்ந்து இன்புற ஏதுவுமாகும். மேலும், இக்காலத்து அஞ்சல் வழியாகக் கற்கும் அமைவுபோன்று கற்கும் கருவியுமாகும்.

இம் மாநாட்டின்கண் எண்பெரும்புலவர்களால் எட்டு உலாவும், ஆறு கலம்பகமும், இரண்டு தூதும் ஆகிய பதினாறு நூல்கள் ஆய்ந்தெடுத்துச் சொற்பொழிவுகள் ஆற்றப்பெற்றுள்ளன. அத்தனை நூல்களையும் அரும்பெறற் றலைவரால் ஆய்ந்து தொகையாக வகுத்தமைத்த சிறந்த தலைமையுரையும் நிகழ்த்த பெற்றது. இவற்றின் விரிவெல்லாம் 'சொற்பொழிவு' நூல் வாயிலாகத் தெரிந்துகொள்வது நலமாகும்.

மாநாட்டின் நிகழ்ச்சிச் சுருக்கம் வருமாறு:

இம் மாநாடு 1958 சனவரி 19-ஆம் நாள் ஞாயிறு காலை 9-30 மணி முதல் 12-30 மணி வரைக்கும், மாலை 4-15 மணி முதல் 7-30 மணி வரைக்கும் சென்னை இராஜாஜி மண்டபத்தின்கண் மிக்க சிறப்பாகநடந்தேறியது. மாநாட்டுத் தலைவராக அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர், முத்தமிழ் வித்தகர், பண்டித

வித்துவான், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள் அமர்ந்து அணிபெற நடத்திஞர்கள்.

உயர்திரு. டாக்டர். இராசா. சர். முத்தைய செட்டியார் அவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்துள்ளார்கள்.

சென்னை உயர்நீதிமன்ற நடுவர் உயர்திரு. சு. கணபதியா பிள்ளை அவர்கள் சிற்றிலக்கியச் சொற்பொழிவுநூலைப் பாராட்டி வெளியிட்டுள்ளார்கள்.

அவையிற்குழுமிய புலவர், புரவலர், செல்வர், பேராசிரியர், மாணவர், பெருமக்கள் முதலியோர் இருபாலாரினும் பெருந் திரளாயிருந்தனர். அனைவர்களும் மிக்க ஆர்வமுடன் தோற்ற மளித்தனர்.

கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் எல்லாரையும் அன்புடன் வரவேற்று வாழ்த்தினர். அவர்கள் இராசா. சர். முத்தைய செட்டியாரவர்களை நல்வரவேற்றுப் பேசுகையில் பண்டுள்ள வேந்தரும், மன்னரும், புரவலர்களும், வள்ளல்களும் முத்தமிழை ஓர் அளவு ஓம்பிவந்தனர். ஆனல் இக்காலத்து நம் அரசர் பெருமானும் அவர்தம் அரும்பெறல் தந்தையாரும் முத்தமிழை வளர்த்துவரும் முறைமைபோன்று எவரும் செய்திலர். இவர்தம் குடும்பம் என்றும் வாழையடி வாழையாக எல்லா வாழ்வும் எய்தி இனிதுவாழ இறைவன் திருவடியிணையினை இறைஞ்சுகின்றேன். அரசர் பெருமானின் அரும்பெறல் தந்தையார் அவர்களின் புண்ணியப் புகழுருவாய்ப் பொலிந்து திகழ்வன "அண்ணமலைப் பல்கலைக்கழக"த் திருக் கோவிலும், சென்னை "அண்ணமலை மன்ற"மும் பிறவும் ஆகும். இப் பெருந்தகையாரின் பெருமுயற்சியால் இனித்தமுறும் தனித் தமிழிசை உயிர்பெற்று, மறுமலர்ச்சியுற்று, வாய்மை வளர்ச்சி எய்தி வளர்ந்து வாழ்ந்து வருகின்றது. அண்ணமலைப் பல்கலைக்கழகமே தமிழுக்குப் பேராதரவு தரும் பெருநிலைக்கள மாகத் திகழ்கின்றது. அக் கலைக்கோவில் நாற்பெருந்துறைகளா யமைந்து நற்பணிபுரிகின்றது. நம் அண்ணமலைப் பல்கலைக் கழகம் பல்பெரும் புலவர்களைத் தோற்றுவிக்கும் தாயகம்; பலபெரும் பேராசிரியப் பெருமக்களைப் பயிற்றுவிக்கும் பணி புரியச்செய்து போற்றும் பொற்கோவில்; அளவிலாத் தமிழ்ப் பெரும்புலவர்களை உளமகிழப் பாராட்டி உற்றுழியுதவி உயர் விக்கும் உறைவிடம்; மேலும் ஒய்வுபெற்று உறைவிடம் நாடி உன்னியிருக்கும் ஒண்டமிழ் முதுபெரும் புலவர்கட்கு அவர்கள் பால் நின்று எவ்வகைப் பணியினையும் எதிர்பாராது, எவ்வகைக் கட்டுப்பாடும் ஏற்படுத்தாது, அவர்கள் விரும்பியவாறு ஆறுத

லுற்று உறைதற்காம் அறிவகங்கள் பல அமைத்திருப்பதாகவும் தெரியவருகின்றது என்று பல புகன்று மாநாட்டைத் திறந்து வைத்தருளுமாறு அன்பும் பணிவும் தோன்ற வேண்டிக் கொண்டனர்.

அரசர்பெருமான் திறந்துவைத்தருளி மொழிந்த திருமொழியின் சுருக்கம்:

"என்னைக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் அளவின்றிப் புகழ்ந்த புகழுரைகள் அத்தனையும் என் அருந் தந்தையாரவர்களைச் சார்வனவாகும். எனக்குத் திரு. சுப்பையா பிள்ளையவர்களைக் கடந்த முப்பதாண்டுகளுக்கு மேலாக நன்கு தெரியும். அவர்கள் இடையறாது நம் அருந் தமிழுக்குப் புரிந்துவரும் நற்பெருந் தொண்டு அளவிறந்தன. அவர்கள் தமிழ் நூல்களைச் சிறந்த முறையில் அச்சிட்டு அழகிய கட்டடஞ் செய்து வெளிநாட்டாரும் விழையும் வண்ணம் வெளியிட்டுவருகின்றார்கள். அவர்களாலேயே பலபெருந் தமிழ் நூல்கள் இறவாது நின்று நிலவுகின்றன. நாங்களெல்லாம் தமிழிசையினைப் புத்துயிர்பெறச் செய்து எங்கணும் பரப்பத் துவக்குங்காலத்து எத்தனையோ எதிர்ப்புக்கள் தோன்றின. அவற்றையெல்லாம் ஒரு வகையாகப் பொறுத்து உண்மை எடுத்துரைத்து நிலைநாட்டுதல் செய்தனம். இப்பொழுது பெரு மக்களே மனமுவந்து வலியவந்து தமிழ்ப் பாட்டுக்களையே விழைகின்றனர். இசைவாணர்களை நசையுடன் பாடும்படி கேட்கின்றனர். சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் மாதந் தோறும் ஒரு கூட்டம் நிகழ்ந்து வருகின்றது. அதற்குக் கூட்டத்தைக் கூட்டுவிப்பது சிறுமமாக இருக்கும் என்று முதற்கண் எண்ணினோம். அப்படியான சிறுமம் ஏதுமின்றித் திங்கட் கூட்டம் முறையாக நிகழ்ந்துவருகின்றது. பெருமக்கள் ஐம்பதின்மருக்குக் குறையாமல் எவ்வகையழைப்புமின்றி முறையாக வருகின்றனர். எங்களுடைய முயற்சிகளுக்கெல்லாம் முன்னரே திரு. சுப்பையா பிள்ளையவர்கள் தனித்தமிழ் மலர்ச்சிக்காகத் தனி நின்று அரும்பாடுபட்டு வளர்த்து வந்தனர். அதனாலேயே இப்பொழுது எல்லாத் துறைகளிலும் தமிழ் முன்னேறித் திகழ்கின்றதென்பது முற்றிலும் உண்மையாகும். அவர்கள் அருமுயற்சியால் நிகழும் இம் மாநாடு நல்ல வெற்றியுடன் நிகழுமாறு எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சித் துவக்கி வைக்கின்றேன்" என்று மொழிந்து துவக்கிவைத்தருளினர்.

இதன் தொடர்பாக நிகழ்ந்த சிறப்புகளனைத்தும் அடுத்த செல்வியில் வெளிவரும்.

# முதல் சிற்றிலக்கிய மாநாட்டு வாழ்த்துக்கள்

........மாநாடு வெகு விமரிசையாய் நடந்தேறுவதுமன்றி இப்படிப்பட்ட மாநாடுகள் வருடாவருடம் கூடி நமது தமிழ் அன்னையின் பெருமையையும் உயர்வையும் உலகெங்கும் பரவச் செய்ய வேண்டுமென்று ஈசனைப் பிரார்த்திக்கின்றேன்.

—ப. சம்பந்த முதலியார்.

தமிழ் மக்களின் கையகத்தும் புகாது மறைந்துகிடக்கும் சிறந்த நூல்களையெல்லாம் கருத்தகத்தும் புகுந்து களிப்பூட்டுமாறு விருப்புடனும் பொறுப்புடனும் எளியவாக்கி மாநாடு கூட்டி வெளியிட்டுக் கன்னித்தமிழ் என்ற பெயர் மங்காது காத்துவரும் தங்கள் தமிழ்க்காவற் பணியை எவரே தலைக்கொண்டு போற்றாதார்!

என் ஆசிரியப் பெருமானாகிய உயர்திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் மாநாடு நடைபெறுவதை அறிந்து அளவிலா உவகையடைகின்றேன். மாநாட்டில் எண்பெரும் புலவர்கள் பணியாற்ற இருப்பது ஒரு தனிச் சிறப்பு. அரசர் ஒருவர் மாநாட்டைத் திறக்கவும் நடுவர் ஒருவர் நூலைப்பற்றித் தீர்ப்புக் கூறவும் வாய்த்தது மற்றொரு சிறப்பு. திருவருளால் அமைந்த சிறப்புக்களுடன் மாநாடு இனிது நிறைவெய்த நெல்லையப்பர் இணையடி பணிகின்றேன்.

—அ. க. நவநீதகிருஷ்ணன்.

மன்னர்மதி அரசர்சர் முத்தயவேள் மாநாட்டைத்
திறந்துவக்கும் மாட்சி பெற்றார்
அன்னவர்அண் ணாமலைப்பல் கலைக்கழகப் பேராசான்
இராமநாதன் என்னும் அண்ணல்
நன்னயமொ ழிப்புலவர் நற்றலைமை ஏற்றார்சீர்ச்
சென்னைஉயர் நீதி மன்றம்
துன்னுகண பதியப்ப வேள்சொற் பொழிவுநூல்
வெளியிட்டார் தொடர்ந்து வாழி.

—பு. சி. புன்னைவனநாத முதலியார்.

சிற்றிலக்கி யச்சீர்கொள் மாநாடு செம்மைநல
வெற்றியுடன் செல்க விரைந்து.

—வல்லை. பாலசுப்பிரமணியம்,
—வ. பா. தாமரைக்கண்ணி.

பண்டைக் காலத்தில், நம் தமிழ்மொழியின், தமிழ்க் கலையின், தமிழ் இலக்கியத்தின் ஒளி நம் நாட்டில் மட்டிலும் அல்ல—கடல் கடந்து ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால்

உள்ள ஏனைய நாடுகளிலும் வீசிக்கொண்டிருந்தது. காலப் போக்கினுல் இடையில் மறைந்து இருந்தது. அவ்வளவுதான். அழிந்துபோகவே இல்லை. அந்த ஒளி அழியாதது; அழிக்க முடியாதது. —ப. சு. சுப்பிரமணியம்.

பண்டைச் சிற்றிலக்கியங்களின் அருமையையும் பெருமை யையும் எடுத்துரைக்க வேண்டிய காலம் இது; இவ்வரும் பணியைத் தாங்கள் மேற்கொண்டுள்ளமை மிகவும் போற்றத் தக்கது. —அமைச்சர் டாக்டர், உ. வே. சா. நூல்நிலையம்.

இத்தகைய மாநாடுகளாலும், கண்கவர் வனப்பிற் காட்சி தரும் நூல்வெளியீடுகளாலும் மக்களுக்கு உளவெழுச்சியூட்டித் தமிழறிவு நல்கும் தங்கள் கழகத்திற்குத் தமிழகம் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடைத்து. —மீ. முத்துசாமி.

முத்தமிழ் வித்தகர், தமிழ்ப்பேராசிரியர் லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமை வகிக்க, தமிழ் வளர்க்கும் டாக்டர், இராசா, சர் முத்தையா செட்டியாரவர்கள் தொடங்கி வைக்கின்ற மாநாட்டில் பல பெரும்புலவர்கள் பங்கு கொண்டு நடைபெறுகின்ற விழா இலக்கியம் விரும்பும் தமிழர் கட்கு ஒரு நல்விருந்து என மகிழ்கின்றேன்.

—டாக்டர், சோம. இலக்குமணன் செட்டியார்,

முத்தமிழ் வித்தகர், பண்டித, வித்துவான், உயர்திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடை பெறும் முதாவது சிற்றிலக்கிய மாநாடு சிறப்பாக நிகழ்ந்து இனிது நிறைவேறுவதாக. —டி. வி. சதாசிவ பண்டாரத்தார்,

அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

மாநாடு வெற்றி பெருக. தமிழாக்கந் தேடும் தங்கள் பணி ஓங்குக. தமிழியக்கங்கள் வீறுபெறுக. தமிழர் பெருவாழ் வெய்துக. —கோ. பாலசுந்தர நாயகர்,

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

அருந்தமிழ் வள்ளல் செட்டிநாட்டரசர், தமிழன் உயிர்நாடி. தமிழரின் இதயத் துடிப்பு, இம்மாநாட்டினைத் திறந்துவைக்கக் கிடைத்திருப்பது நற்பேருகும் இத்தகைய சிறப்புக்கள் பலவும் பல்கிய இம்மாநாடு இனிது நிறைவுறுக என்று பொன்னம்பல வன் புகழினை இறைஞ்சுகின்றேன். —சிவ. திருநாவுக்கரசு,

அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

---

# ஆங்கிலமே பொதுமொழியாதற் குரித்து

[மறைத்திரு. மறைமலையடிகளார்]

ஆங்கிலர் தாங் கைப்பற்றிச் செங்கோலோச்சும் இவ் விந்திய நாட்டிலேயே தமது தாய்மொழியாகிய ஆங்கிலத்தைப் பரவ வைத்தற்கு இத்துணைப் பெருமுயற்சியும் இத்துணைப் பெரும் பொருட் செலவுஞ் செய்துவருகின்றனரென்றால், தமது தாய் நாடாகிய பிரித்தானியாவிலுந், தம்மவர் குடியேறி வைகும் வடஅமெரிக்கா தென்னமெரிக்கா ஆத்திரேலியா தென்னாப்பிரிக்கா முதலான பெரும்பெரு நிலப் பகுதிகளிலுமெல்லாம் அவர்கள் இன்னும் எத்துணை முயற்சியும் எத்துணை கோடிக் கணக்கான பொன்னுஞ் செலவு செய்து தமது ஆங்கில மொழியைப் பரவச் செய்பவராதல் வேண்டும். அதனாலேதான் இவ்வுலக மெங்கணும் ஆங்கில மொழி திருத்தமாகப் பயிலவும், பேசவும், எழுதவும் பட்டு வருகின்றது. ஆங்கிலம் நன்கு பயின்று அதில் நூல் எழுதும் ஆசிரியர் தொகையும் அவர் எழுதிய நூற்றொகையுமே கணக்கெடுத்தல் இயலாதென்றால், ஆங்கிலப் பயிற்சி மட்டுஞ் செய்வார் தொகையைக் கணக்கெடுத்தல் இயலுமோ? இவ் வியல்பினை உற்று நோக்குங்கால், ஆங்கிலத்தின்முன் வேறெந்த மொழியுந் தலைதூக்கி நில்லாதென்பது தேற்றமேயாம்.

இங்ஙனம் இவ் விந்தியதேயத்தின் மட்டுமேயன்றி இவ்வுலகம் எங்கணும் அழுந்திப் பயிலவும், பேசவும், வழங்கவும் பட்டுவரும் ஆங்கிலமொழி யொன்றே உலக முழுமைக்கும் பொதுமொழியாய்ப் பரவிவருதலால், அது தன்னையே நம் இந்து மக்கள் அனைவரும் பொதுமொழியாய்க் கைக்கொண்டு பயிலுதலும், வழங்குதலுமே அவர்கட்கு எல்லாவகையான நலங்களையுந் தருவனவாகும். முதலில் உலகியல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் கடைக்கூட்டுதற்கு எத்தொழிலைச் செய்வதாயிருந்தாலும், அத்தொழில் நுட்பங்களை நன்கறிந்து செய்தற் குதவி செய்யும் பல்லாயிரக் கணக்கான தொழிலறிவு நூல்கள் ஆங்கில மொழியிலன்றி வேறெதிலேனும் இருக்கின்றனவா? பல்வகைக் கைத்தொழில்களைப் புரியுங்கால் அவற்றிற்கு வேண்டும் பல்வகைப் பண்டங்களைப் பல நாடுகளிலிருந்து வருவித்தற்கும், அவற்றால் தாஞ் செய்து முடித்த பண்டங்களைப் பல நாடுகளிலும் உய்த்து விலைசெய்து ஊதியம் பெறுதற்

---

1. மறைமலையடிகளாரின் 'இந்தி பொதுமொழியா?' என்ற நூலிலிருந்து எடுக்கப்பெற்றது.

கும் ஆங்கிலமொழியேயன்றி வேறெதுந் துணைசெய்யுமோ? செய்யாதே. இன்னும் உலகமெங்கணும் நடைபெறும் வாணிக மெல்லாம் ஆங்கில மொழியின் உதவிகொண்டே நன்கு நடை பெறுதலை அறிந்துவைத்தும், அதனைப் பொதுமொழியாக வழங் காமல், விரிந்த வாணிக வாழ்க்கைக்கு ஒரு சிறிதும் பயன் படாத இந்தியைப் பொதுமொழியாக்க முயல்வோர் நம்மனோர்க்கு உண்மையில் உதவி செய்பவர் ஆவரோ? கூர்ந்து பார்மின்கள்.

இனி, அரசியற்றுறையில் நம் இந்துமக்களை முன்னேற்றி வருவதும், தம்முரிமைகளைக் கண்டு கேட்க அவர்கட்குக் கண்திறப்பித்ததும், இவ்விந்திய நாடெங்கணும் பெரும்பொருட் செலவாற் பலகோடி மக்களாற் பயிலப்பட்டு இயற்கையே பொது மொழியாய்ப் பரவி வருவதும், இலக்கண இலக்கியத் துறைகளி லும் நடுநிலை குன்றா உண்மைகாண் வகைகளிலும் பன்னூறாயிரக் கணக்கான நூல்கள் புதிய புதியவாய்ப் பெருகும் அறிவுப்பெருஞ் செல்வம் வளரப் பெறுவதுமான ஆங்கிலமொழியை, எல்லா மொழிகளிலும் உள்ள எல்லாச் சிறந்த நூல்களையுந் தன்கண் மொழிபெயர்த்து வைத்து அவற்றின் சிறப்பு வாய்ந்த ஆங்கில மொழியை, நம்மனோர்க்குப் பொதுமொழியாக்காமல், இந் நலங் களில் ஒரு கடுகளவுதானும் இல்லா இந்தி மொழியைப் பொது மொழியாக்க முயலல் அறிவுடையார் செயலாகுமா? ஆகாதே. ஆதலால் நந்தமிழ் நாட்டவர் ஆங்கிலத்தையுந் தமிழையுமே நன்கு பயின்று நலம் பெறுவாராக.

குறிப்பு:—ஏறத்தாழ இருபதாண்டுகட்கு முன் திரு. இராஜாஜி அவர்கள் ஆட்சியுள் நுழைந்ததும் நன்கு ஆய்ந்தோய்ந்து பாராமல் இந்தியை வலுகட்டாயமாகத் தமிழகத்திற் புகுத்தினர். அதனை அற முறை தவிராது தக்க பல காரணங் காட்டி எதிர்த்த சான்றோர், புலவர், தாய்மார், ஆசிரியர், மாணவர், பெருமக்கள் முதலிய பல்லோரையும் கண்ணோட்டமும் முறைமையுமின்றிச் சிறைபுகுத்தல் முதலிய பல இன்னல்கட்கு உட்படுத்தி வெருவந்த செய்தொழுகினர். அக்காலத் துத் தனித்தமிழைக் காக்கும் பெருமலை **மறைத்திரு மறைமலையடிகளார்** இவ் வெளியீட்டினை வெளிப்படுத்தருளினர்.

அஞ்ஞான்று அடிகளாரின் நனிமிகு கூர்த்தமதியினுற் கண்டு நிலைநாட்டிய காரணங்களையே இஞ்ஞான்று இராஜாஜியவர்கள் உண்மை யென உளம் ஒப்பி நாக்கடிப்பாக வாய்ப்பறை அறைந்தும், பல்வேறு செய்தித்தாள்களில் கட்டுரைகளில் வரைந்தும், பல அரியபெரிய மேடை களில் சொற்பொழிவாற்றியும் இந்தியை எதிர்த்தும் ஆங்கிலத்தைப் பொது மொழியாக்க வற்புறுத்தியும் வருகின்றார்கள். தமிழ்த் தாய்க்கு மறைமலையடிகளார் செய்து போந்த தனித் தொண்டைப் பலவாண்டுகள் கழித்தேனும் உண்மை யுணர்ந்து இராஜாஜி செய்து வருவது பெரும் ஆறுதலளிக்கும் பெற்றியாகும். அமிழ்தினுமினிய தமிழ் வாழ்க! ஆங்கிலம் பொதுமொழியாக அமைக! அனைவரும் நலமுறுக.

---

# திருக்கார்த்திகை தீபம்

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

(வள்ளுவர் 1988 கார்த்திகைமீ 20உ வியாழக்கிழமை 5-12-57)

கார்த்திகை மாதத்தில், கார்த்திகை நட்சத்திரத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் தீப விழாவே திருக்கார்த்திகை தீபம் என்பது. இதனைக் "கார்த்திகை நாள் விளக்கீடு" என்று கூறுவர் திருஞான சம்பந்தப் பெருமான். இது இன்று நம் நாடெல்லாம் நடைபெறும் திருவிழாவாக இருந்தாலும் திருவண்ணாமலைக்கே சிறப்பாக உரியதாகும்.

அண்ணாமலை என்பது அண்ண முடியாத, அஃதாவது அடைய (அண்ணுதல்-அடைதல்) முடியாத மலை, யாரால் அண்ண முடியாதது? எல்லா உலகங்களையும் படைக்கும் நான்முகனாலும், காக்கும் திருமாலாலும்கூட அடைய முடியாதது இது.

முன்னொரு நாள் நான்முகன் (பிரமன்), "நான்தான் பரமன்" என்றார்; திருமால், "இல்லை; நான்தான் பரமன்" என்று கூறினார். உடன் இருவரும் அகந்தையினால் சண்டை செய்யத் தொடங்கினர். அப்போது மெய்யான பரமனாகிய சிவபெருமான் அவர்கள் முன் அழல் மலையாக நின்று, அசரீரியாக, "உங்களில் இத்தீமலையின் அடியையாவது முடியையாவது முதலில் எவன் காண்கின்றானோ அவன்தான் பரமன்" என மொழிந்தருளினார். உடனே, திருமால் பன்றி உருவெடுத்து அச்சோதி மலையின் அடியைத் தேடினார்; பிரமன் அன்னமாகி முடியைத் தேடினார். இருவராலும் அண்ண முடியாத, அணுக முடியாத அடியையும் முடியையும் உடைய மலையாக அச்சோதி மலை நின்றது. அதனால் அஃது அண்ணாமலை எனப் பெயர் பெற்றது. அந்த மலையே சோதி மலையாகிய திருவண்ணாமலை. பின்வரும் தேவார, திருவாசகப் பாடல்கள் இவ்வுண்மையை நிலைநாட்டுவன:

"பிரமன்அரிஎன்று இருவருந்தம் பேதைமையால்
பரமம் யாம்பரமம் என்றவர்கள் பதைப்புஒடுங்க
அரனார் அழல்உருவாய் அங்கே அளவுஇறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ!" —திருவாசகம்

"விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேல்உறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழல்ஆகிய அண்ணாமலை அண்ணல்."
—திருஞான சம்பந்தர்.

திருமாலும் நான்முகனும் தம் அகங்காரம் தீர்ந்து உண்மை இது என அறியவே சிவபெருமான் அழல் உருவாகி நின்றார் என்பதைப் பின் வரும் திருவாசகம் தெளிவுபடுத்தும்:—

"அலரவனும் மாலவனும் அறியாமே அழல்உருவாய்
நிலமுதற்கீழ் அண்டம்உற நின்றதுதான் என்னேடீ?
நிலமுதற்கீழ் அண்டம்உற நின்றிலனேல் இருவரும்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ."

அருட்கடலாகிய சிவபெருமான் அழல்மலையாய் நின்றது கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் மாலைப் போதில் ஆகும். அதனாலேயே ஒவ்வோராண்டிலும் அவ்வேளையிலே திருவண்ணாமலை

யெங்கும் தீபங்கள் ஏற்றப் பெற்றுத் தீயுருவாகக் காட்சியளிக்கிறது. அச்சோதியைக் கண்டு வழிபட நாலா பக்கங்களிலிருந்தும் அடியார்கள் அங்கேவந்து கூடிக் கண்குளிரக்கண்டு இன்புறுகின்றார்கள். திருவண்ணுமலையில் நடைபெறும் இத் திருவிழாவே நாடெங்கும் உள்ள ஊர்களிலெல்லாம் கொண்டாடப் பெறுகின்றது.

அப்பமூர்த்திகள் திருவண்ணுமலைப் பதிகம் ஒன்றில் ஒவ்வொரு பாடலிலும் "திரிபுரம் எரித்த அண்ணுமலையார்" என்று பாடியருளினர். அதனுல் திரிபுர சங்காரமும் திருவண்ணுமலையிலேதான் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று ஊகித்தறியலாம்.

கார்த்திகைப் பெண்கள் அறுவரால் வளர்க்கப் பெற்றமையால் **கார்த்திகேயன்** என்ற திருப்பெயரை முருகப்பெருமான் பெற்ருர். ஆதலினுல் திருக் கார்த்திகையன்றும், மாதந்தோறும் வரும் கார்த்திகை நாட்களிலும் முருகப் பெருமானைக் குறித்து விரதம் இருந்து அடியார் பலர் திருவருளைப் பெறுகின்றனர்.

சிறப்பாக முத்திதரும் தலங்கள் நான்கு என்று பெரியார் கூறுவர். திருவாரூரிலே பிறக்க முத்தியும், காசியிலே இறக்க முத்தியும், சிதம்பரத்திலே தெரிசிக்க முத்தியும் கைகூடும். பிறப்பதோ இறப்பதோ நம் வசம் அன்று ; சென்று தெரிசித்தல் சிறிது எளிதே ; அதனினும் மிகவும் எளியது நினைப்பது ; **நினைத்தாலே முத்திதரும் திருத்தலம் திருவண்ணுமலையே.** இப் பெருமையினை எண்ணியே திருஞான சம்பந்தப் பெருமான்,

"அண்ணுமலை அண்ணல் சேவடிநினைவார் வினையிலரே."

என்றும்,

"நினைத்துத் தொழுவார் பாவம் தீர்க்கும் அண்ணுமலையாரே."

எனவும் திருவாய் மலர்ந்தருளினர்.

"அண்ணுமலையனை அடியேன் மறந்து உய்வனே?"

என்று ஒவ்வொரு பாட்டிலும் மகுடமிட்டு உள்ளம் உருகி ஒரு பதிகம் பாடியருளினர் திருநாவுக்கரசரும்.

திருக் கார்த்திகைப் பெருவிழாவில் அடியார் அனைவரும் திருவண்ணுமலை அண்ணலை உளமாரப் பணிந்து "கைகளும் தலைமீதேறக் கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் பொழிய நின்று வணங்கிப் போற்றித் திருவருள் பெற்று எல்லாச் செல்வங்களும் கைகூட மேலோங்கிப் பெருவாழ்வு அடைந்து உய்ய முன் வாருங்கள் ; முன் வாருங்கள். உங்களைப் பிடித்த பீடைகளெல்லாம் விலகும் ; திருவருளால் உய்யலாம் வாரீர்.

"ஆடிப் பாடிஅண் ணுமலை கைதொழ
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே."

"அண்ணுமலை பரவி
உருகும் மனம் உடையார் தமக்கு உறுநோய் அடையாவே."

"அல்லல் தீர்க்கும்அண் ணுமலை கைதொழ
நல்ல வாயின நம்மை அடையுமே."

—(அப்பமூர்த்திகள் தேவாரம்)

# கையச்சுப் பொறியில் தமிழ் எண்களுக்கும் இடமிருத்தல்வேண்டும்

சென்னைமாநில ஆட்சியாளர் நம் செந்தமிழ் மொழியினை ஆட்சி மொழியாக்கி எல்லா ஆட்சித்துறைகளிலும் நடைமுறைக்குக் கொண்டுவந்திருப்பதும், தமிழ்த் தேர்வுபெற்றாரே ஆட்சித்துறை அலுவல்களில் அமரும் தகுதியுடையாரென அமைத்திருப்பதும் பெரிதும் பாராட்டிப் போற்றத்தகுந்தனவே. அதுபோல் கையச்சுப்பொறி (Typewriting) தமிழில் அமைக்கவேண்டிய முறையைப் புதுமுறையாகவமைத்து ஒப்புதல் கொடுத்திருப்பதும் வரவேற்கத்தகுந்த மாண்புடையதாகும்.

அதன்கண் தமிழ் எண்களுக்கும் இடமிருத்தல் வேண்டும். அரபு எண்கள் பரவிவழங்கினாலும், தமிழ் எண்களும் ஆங்காங்கே வழங்கி வருகின்றன. அம்மட்டுமன்று புத்தகங்களில் இருவேறு எண்கள் வழங்கவேண்டிய இன்றியமையாமையும் ஏற்படுகின்றது. அப்பொழுது தமிழ் எண்கள் இல்லாவிட்டால் உரோமன் எண்ணையாவது வழங்கவேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. ஆதலால் தமிழ் எண்கள் இருத்தலே ஏற்புடைத்தாகும். நம் தமிழ்மொழி எழுத்திற்கோ எண்ணுக்கோ பிறமொழிகளைப்போல் வேறு எந்த மொழியிலிருந்தும் வரிவடிவைக் கடன்பெற்றதின்று. தன் வரிவடிவங்களையும் சொற்களையும் பலமொழிகட்குக் கடன்கொடுத்திருக்கின்றது என்பது மொழி வல்லார் ஆய்ந்துகண்ட உண்மையாகும்.

தமிழ் எண்களில் இயல்பாக எழுத்துக்களில் அமைந்த 'க, உ, ரு, எ, அ, க0' என்னும் ஆறு எண்களும் நீங்க எஞ்சிய '௩, ச, சு, கூ' நான்கு எண்களுக்கு மட்டுமே இடமமைத்தல் வேண்டும். அதை அமைத்துக்கொள்வோமாயின் தமிழுக்கென எண்வடிவு இருந்ததில்லை என ஆய்வாளர் கூறநேரும் குறை அகலும். வடமொழி எழுத்துக்களாகிய 'ஸ, ஜ, க்ஷ, ஹ, ஷ' முதலிய எழுத்துக்கள் நம் இயற்கைத் தமிழொலியமைப்புக்கு ஒரு சிறிதும் பொருந்தாதன. அவற்றை அறவே நீக்கிவிடலாம். $\frac{1}{4}$, $\frac{1}{2}$ என இரண்டிடம் அமைத்திருப்பதையும் நீக்கிவிடலாம். அதற்கு ஈடாக $\frac{1}{9}$, $\frac{5}{8}$ முதலியனபோன்று $\frac{1}{4}$, $\frac{1}{2}$, என்பவற்றையும் அச்சிட்டுக்கொள்ளலாம். ஆகவே எண்ணுக்குரிய நான்கிடங்களை அமைப்பதால் இடமொன்றும் கூடுதலாகாது. அதனால் இம்முறையினை நன்காய்ந்து தொன்றுதொட்டு வருகின்ற தமிழ் எண் வடிவங்களை நிலைப்பிக்கச் செய்து தமிழுக்குக் குறைநேராவண்ணம் காக்க அரசினரை வேண்டுகின்றோம்.

---

# சிலப்பதிகாரம் (கானல்வரி)

## (மாதவி பாடிய ஆற்றுவரிப்பாடல்)

[பண்டிதவித்துவான், திரு. தி. சங்குப் புலவர்]

பொருள் விளக்கம்

(க) காவேரி என்னும் பேர் யாறே! நீயும் ஒரு மங்கை போலத்தான் நடந்து செல்கின்றாய். மங்கையர் நடந்து செல்லும் போது அவர்கள் புனைந்திருக்கும் மலர் மணத்தை யறிந்து தேன் குடிப்பதற்காக மருங்கில் (பக்கத்தில்) வண்டுகள் சிறப்பாகக் கூடி யாரவாரஞ் செய்யும். உன்மருங்கிலும் (இருகரையிலும்) உள்ள மலர்மணத்தால் வந்து வண்டுகள் கூடி மொய்த்து ஆரவாரஞ் செய்கின்றன. மங்கையரும், மணிப்பூ ஆடை (அழகிய பூத்தொழில் பொருந்திய சேலையை) உடுத்துப்போர்த்து நடப்பார். நீயும், மணிப்பூ ஆடை (அழகிய மலர்களை உடை போல) போர்த்து நடக்கின்றாய். மங்கையரும், கருமையான கயல் (கெண்டைமீன்) போன்ற கண்களை விழித்து அசைந்து மெல்லென நடப்பார். நீயும் அவ்வாறே கருமையான கயற்கண் (கெண்டைமீன்களாகிய கண்களைக் காட்டி) விழித்து மெல்லென நடக்கின்றாய். இவ்வாறு நீ நடந்து எங்குஞ் சென்று திரிவதற் கெல்லாம் காரணம் என்னவென்று ஆராய்ந்தேன். நினது கணவனாகிய சோழ மன்னனது திருத்தமான செங்கோல் வளையாமல் இருப்பதே (நீதி தவறாமல் அரசுபுரிவதே) காரணம் ஆகும் என அறிந்தேன் காவேரியே! நீ வாழ்க என்பது.

(உ) காவேரியே! மலர்கள் நிறைந்த வளமுள்ள சோலையில் மயில்கள் தோகை விரித்து ஆடவும், மாமரங்களில் இருந்து கருங்குயில்கள் விரும்பி இசை பாடவும், பெண்கள் நீராடும் போது கூந்தலிலிருந்து சோர்ந்து விழுந்த அழகிய பூமாலைகள் அருகில் அசைந்து வரவும் மெதுவாக நீ நடக்கின்றாய். நீ இவ்வாறு அழகு விளங்க அச்சம் சிறிதும் இல்லாமல் நடப்பதற்குக் காரணம் என்ன என்று ஆய்ந்தேன். உன் கணவனாகிய சோழ மன்னன் பகைவர்க்கு அச்சத்தைத்தரும்படி கையில் வைத்திருக்கும் வேலாயுதத்தின் வலிமையை நீ அறிந்ததுதான் எனத் துணிந்தேன். காவேரியே! வாழ்க என்பது.

(ங) காவேரியே! உன் கணவனாகிய சோழ மன்னனால் காக்கப்படும் சோழநாடு உன் பிள்ளையாகவும் நீ தாயாகவும் இருக்கின்றாய். ஆதலால் அந்நாட்டை வளர்த்து வருகின்றாய்.

யுக முடிவு வந்தாலும் நீ அந்நாட்டைக் காக்கும் பேருதவியை நீங்காமற் செய்வாய் எனத்துணிந்தேன். இவ்வாறு நீ செய்வ தற்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்தேன். இந்நாட்டிலுள்ள உயிர்களை யெல்லாம் காப்பவனும், ஆணைச் சக்கரத்தை யெங்கும் நடத்துவோனும், பகற்காலத்தைக் காட்டும் சூரியன் போன்ற வனும் ஆகிய சோழ மன்னனது பெருங் கருணையே எனவும் தெரிந்தேன். காவேரியே! வாழ்க என்பது.

**உட்கருத்து**

மாதவி தன் நாட்டு மன்னன் ஆகிய சோழனை வாழ்த்திப் பின்னர்ப் பாடக்கருதினாள். சோழமன்னன் பெருமைக்குக் காரணம் ஆன காவேரியை வாழ்த்தினாள். காவேரியை ஒரு கன்னிகையாகக் கற்பனை செய்தாள். சோழ மன்னனை அவள் கணவனாகக் கற்பித்தாள். கன்னியர்க்கு நல்ல கணவன் வாய்க்க வேண்டும். கணவன் நல்லவனாக வாய்த்திலனேல் அக் கன்னி சிறப்படையாள். ஒரு கன்னிக்குக் கணவன் மன்னனாக வாய்ப்பது அருமை. அம் மன்னன் நெறிமுறை வழுவாது உயிர்களைக் காக்கும் நற்பண்பு வாய்ந்தவனாக அமைவது அதனினும் அருமை. பகைவர்கள் யாவருங்கண்டு அஞ்சத்தக்க வேலாயுதத்தையுடைய வீரனாக வாய்ப்பது அதனினும் அருமை. தன்னுயிர்போல மன்னுயிர்களைக் காக்கும் பெருங்கருணையுடையவனாக வாய்ப்பது அதனினும் அருமை. தன் ஆணை எங்குஞ் செல்லும்படி பேர் பெற்ற மன்னன் ஆகவும் பல நாட்டரசர்கட்கும் தலைவன் ஆகவும் வாய்ப்பது மிகவும் அருமையானது. அத்தகைய சிறப்புடைய கணவன் ஒரு கன்னிக்கு வாய்த்தால் அவள் புத்தாடையுடுத்துப் பொற்பணி பூண்டு மெல்லென நடந்து வீதியுலாப் போந்து பல்வளம் கண்டு, கண்ணும் மனமும் களித்து, கொஞ்சமும் நெஞ்சில் அஞ்சுதலின்றிக் கற்பைக் காத்துக் காசினியிற் பல காலமும் வாழ்வாள். இக் காவேரியும் அத்தகைய கணவன் வாய்த்ததனால் சீர் சிறந்து நீர் நிறைந்து மடுப்பாரும் தடுப்பாரும் இன்றி எங்கும் நடந்து எழிலுடன் செல்கின்றது. எக்காலமும் இவ்வாறே இடையறாது தடையின்றி எங்கும் பரந்து பொங்கும் வளம் பெருக்கி வாழும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை யென்பது கருத்தாகும். ஆற்று வரியாகிய மூன்று பாடல்களும் அடியிற் காண்க. படித்துப் பயன் நுகர்க.

"மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்த வெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழி காவேரி." (௧)

"பூவர் சோலை மயிலாலப் புரிந்து குயில்க ளிசைபாடக்
காமர் மாலை யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை யருகசைய நடந்த வெல்லா நின்கணவன்
நாம வேலின் திறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி." (உ)

"வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியா தொழுக லுயிரோம்பு
மாழி யாள்வான் பகல்வெய்யோ னருளே வாழி காவேரி." (ங)

ஆற்றுவரி பாடிய பின்னர் மாதவி சார்த்துவரி பாடினள். சார்த்துவரி என்பது பாட்டுடைத் தலைவன் பதியொடும் பெயரொடுஞ் சார்த்திப் பாடும் பாட்டாகும். புகாரேயெம்மூர், புகாரேயெம்மூர் என்ற முடிவுடைய மூன்று கவிகளும் சார்த்து வரிப் பாடல்களாம். அவற்றின் முன்னின்ற கவியொன்று மட்டும் "கையுறைமறை" என்ற துறை யமைந்தது. பின்னின்ற இரண்டும் "வரைவு கடாதல்" என்னும் துறையமைந்தவை.

(க) "கையுறைமறை" என்பது தலைவியை விரும்பித் தலைவன் கொண்டுவந்த கையுறையைப் பாங்கி ஏற்றுக்கொள்ளாமல் மறுப்பது. களவொழுக்கத்திற் கூடிவந்த தலைவன் பாங்கியை வாயிலாகக் கொள்ள நினைத்தான். பாங்கி யுடன்பாடு பெறுவதற்காகச் சில முத்துக்களைக் கையுறையாகக் கொண்டு வந்து தலைவியிடத்திற் கொடுக்குமாறு கூறினான். பாங்கி ஏற்காமல் மறுத்துக் கூறுகின்றாள். ஐய! நீங்கள் ஒவ்வொரு நாளும் மன்மதனைப்போல வருகின்றீர். அன்றியும் ஒரு மயக்கங் கொண்டவரைப் போலவும் வருகின்றீர். "நிறை நிலாப்போன்ற வட்டமான ஒளி பொருந்திய உங்கள் தலைவியின் செங்கனி வாயுள்ளே யிருக்கும் பற்களுக்கு இம் முத்துக்கள் ஒப்பாக மாட்டா" என்று நீங்களே கூறுகின்றீர். பின்னும் இம் முத்துக்களை வாங்கி யணிந்து கொள்ளுங்கள் என்று அடிக்கடி வந்து எங்களை வேண்டுகின்றீர். இம் முத்துக்கள் எங்கட்கு ஓர் அருமையான பொருளாகத் தெரிந்தாலன்றோ நாங்கள் விரும்பி வாங்கிக்கொள்வோம். உங்கட்குத்தான் அது அருமையான பொருள். எங்கள் ஊர் கடற்கரையில் உள்ளது. கடலில் அலைகள் வந்து அடிக்கடி மோதும். அவ்வாறு அலைகள் வந்து மோதும்போது எல்லாம் முத்துக்களை அரித்துக்கொண்டு வரும். அவ்வலைகள் மோதித் திரும்பிப் போகும்போது எல்லாம் மணம் பொருந்திய அக் கானலிற் கிடக்கும் பூமாலைகளைக் கொண்டு செல்லும். அவ்வாறு செல்லுங் காட்சி ஒரு பண்டத்தைக் கொண்டு வந்து விற்று மற்றொரு பண்டத்தை வாங்கிச் செல்லும் பண்டமாற்று வணிகர்போலத் தோன்றும்.

(தொடரும்)

# சேக்கிழார் புராணநடை

[திரு. ச. கணபதி முதலியார், எம். ஏ., எல். டி.]

(செல்வி, சிலம்பு - ௩௨, பரல் - ௫, ௨௪0-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சேக்கிழார் பிள்ளைத் தமிழில் அம்புலிப் பருவம் ஆறுவது பாட்டில் 'எழுபரவை' என்ற சொற்றொடரைவைத்து சேக்கிழாரது சொல் திட்பநுட்ப அறிதிறனை மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் போற்றிப் புகழும் அருமைப் பாட்டினை அடியில் வருஉம் செய்யுளால் அறிமின்:

"குறையுடைய பாம்பொன் றெடுத்துண் டுமிழ்ந்திடக்
குலைகுலைந் துழல்வை எங்கள்
கோமான் பெருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங்
குருமணிச் சூட்டு மோட்டு
நிறைவுகெழு துத்திப் பணாடவிப் பாம்பொன்று
நேரடைய மன்று ணாணு
நினையீன்ற தொருபரவை யிலகுவே பாரமென
னென்னுனைத் தனையு மெண்ணேல்
முறையினொரு சிறுதூக்கி னெழுபரவை யும்புக
முடித்துற நிறுத்தா னிவன்
மொழியெங்க டம்பிரான் வல்லப முணர்ந்திலைகொல்
முத்தமா ளிகைவா னயாற்
றறைமணித் திடாரய குன்றைநக ராளியுட
னம்புலி யாட வாவே
அருளுருத் தேசுபொலி யருள்மொழித் தேவனுட
னமபுலி யாட வாவே."

அம்புலிப் பருவம் என்பது பாட்டுடைத் தலைவனது அருமை பெருமைகளைக் கூறிச் சந்திரனை அவனோடு விளையாட வாவென்று சாம, பேத, தான, தண்டங்கூறி அழைக்கும் இலக்கணத்தை உடையது. பிள்ளை அவர்கள் சேக்கிழாரின் கலைநூற் றெளிவையும் கட்டுரை வன்மையுங்காட்டி அம்புலியை விளையாட அழைக்கின்றார். "சந்திரனே! உன்னை உடற் குறைபாடுடைய இராகு விழுங்குகின்றது. எங்கள் தலைவன் கலையில் வல்லுநன். இவனைப் பேரறிஞனை பல படங்களை யுடைய ஆதிசேடன் சபையில் சந்திக்க நாணுவன். உன்னைக் கடல்பெற்றது. நீ திருப்பாற்கடலினின்றும் எழுகின்றாய். எங்கள் பெருமான் ஒரு செய்யுளில் பரவை (கடல்) என்ற

சொல்லை ஏழுதடவை வைத்துப் பொருள்நயம் புலப்படுத்தி இருக்கிறான். அன்றியும் ஏழுகடல்களையும் ஒரு தராசில் (துலையில்) முயற்சியின்றி எளிதாகத் தூக்கிநிறுத்தி இருக்கிறான். அவனுடைய வல்லபத்தை நீ அறிந்திலை போலும். நீ, அவனோடு விளையாடுவதற்குத் தகுதியுடையை எனவே அவனோடு விளையாட வருதி."

"முறையினொடு சிறுதூக்கி னெழுபரவை யும்புக
முடித்துற நிறுத்தா னிவன்."

என்ற அடி ஆழ நினைத்தற்குரியது. 'தூக்கு' எனுஞ் சொல் செய்யுளையும் துலையையும் குறித்து நிற்றலையும் நன்கறிக.

இனிச் சேக்கிழார் சில சொறகளைக் குறிப்பிட்ட சில இடங்களில் சில அடியார்கட்கு மாத்திரம் வைத்தமைக்கும் சொன்னெறி முறையைக் கண்டு, களிப்பாம். முதற்கண 'ஐயர்' என்ற சொல்லைக் காண்பாம். 'ஐ - வியப்பாகும்' என்பது தொல்காப்பியம்.

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப."
(தொல். பொருள். கற்பியல்: ௪)

என்பது அச்சொல் சிறப்புப்பொருளில் பயிலும் இடம். இதில் 'ஐயர்' என்ற சொல், 'இருடி'களைக் குறித்துநிற்கும். பொதுவில் இத்தீஞ்சொல் வியத்தகு, செயற்கருஞ் செயலைச் செய்த தவச் செல்வர்களையும் சிவவொழுக்கம் சிவணப்பெற்ற மெய்யடியார்களையும் குறிக்கும் ஒரு சிறப்புச் சொல். இச்சொல் பிறப்பில் உயர்ந்தவர்களாகக் கருதப்படுகிற ஓர் இனத்தாரைச் சுட்டி நிற்பதாகக் காணப்படவில்லை. குலத்தால் தாழ்ந்தாரேனும் சீலத்தால் உயர்ந்தவராயின் அவர் 'ஐயர்' எனுஞ் சொற்குரியவர் என்பது சேக்கிழார் அச்சொற்குக் கண்ட செம்பொருள். பாணர் குலத்தில் தோன்றிய திருநீலகண்ட யாழ்ப்பாணரை,

"ஐயர் நீர் உளமகிழ விங்கணைந்த உறுதியுடையோம்."

"ஐயர் நீரவதரித்திட விப்பதியளவில் மாதவமுன்பு
செய்தவா றெனசசிறப் புரைத்தருளி."

"ஐயரே உற்றவிசையளவினால் நீர்
ஆக்கிய விக்கருவி யினைத் தாருமென."

"ஐயர் நீர் யாழிதனை முரிக்குமதென்."

என்று நான்கு இடங்களில் சம்பந்தர் கூற்றாக வைத்து அவரைச் சேக்கிழார் அழைப்பதைக் குறிக்கொண்மின். பறையர் குலத்

தோன்றலாக வந்துதித்த திருநாளைப் போவாரையும் (நந்தனர்) தில்லைவாழந்தணர்கள்,

"ஐயரே! அம்பலவர் அருளாலிப் பொழுதணைந்தோம்."

என்று விளிக்குமாறு அமைத்ததையும் மனத்துக்கொண்மின். கொலையையே புரிந்துவாழும் வேடுவர் குலதிலகமாகிய கண்ணப்பரை,

"சார்வலைத் தொடக்கறுக்க எகும் ஐயர்."

"ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர்போல ஐயர்,
நீள்நிலை மலையை ஏறி."

என்று ஈரிடங்களில் குறித்தமையையும் நெஞ்சில் ஆழப்பதிய வைத்துக்கொள்மின்.

'கெட்டேன்' என்ற சொல்லும் இந்நீர்மைத்தே. இச் சொல்லும் சேக்கிழாரால் சில இடங்களில் குறிப்புச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மனம் இடருற்றுழியும் இரு தலைக்கொள்ளி எறும்புபோல் இருந்துழியும் இரக்கக் குறிப்புத் தோன்றச் சேக்கிழார் அந்தந்த அடியார் கூற்றில்வைத்துக் காட்டும் திறனையும் ஆய்ந்து இன்புறுக. வெண்ணீறு ஒருக் காலும் பூசி அறியா அதிசூரன் வெண்ணீறு சண்ணித்தமேனி யனைத் தம்முன்வந்து நின்றுழி ஏனாதிநாத நாயனர் மனந் திடுக்குற்று, நடுக்குற்றுச் செய்வதொன்றறியாராய்,

"கண்டபொழு தேகெட்டேன் முன்பிவர்மேற் காணுத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினிஎன்."

என்று கூறியதிலிருந்தும், கண்ணப்ப நாயனர் திருக்காளத்தி மலையில் குடுமித்தேவரின் தனிநிலை கண்டு மனஞ்சாம்பிய வராய், உளங்கூம்பியவராய்,

"வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதியார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானம் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ளார் ஒருவரும் இன்றிக் கெட்டேன்
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே என்று நைந்தார்."

என்று கழறியதிலிருந்தும், திருக்காளத்தி அப்பர் திருமுன்னர் இறைச்சித்துண்டும், எலும்புத்துண்டும் சிதறிக்கிடந்துழித் தவச் செல்வராகிய சிவகோசரியார்,

"வெந்தஇறைச் சியும்எலும்பும் கண்டகல மிதித்தோடி
இந்த அனு சிதங்கெட்டேன் யார்செய்தார் என்றழிவார்."

என்று சொற்றதிலிருந்தும், எல்லையிலாத் திருநீறுபோற்றும் இருவரையும் சென்று காணுங் கருத்துடையேன் என்று மதுரைக்கு எழுந்த பாலறாவாயரை,

" ஆய பொழுது திருநாவுக் கரசு புகலி ஆண்டகைக்குக்
காய மாசு பெருக்கியுழல் கலதி அமணர் கடுவினைசெய்
மாய சாலம் மிகவல்லார்; அவர்மற் றென்னை முன்செய்த
தீய தொழிலும் பலகேட்டேன் செல்ல இசையேன் யானென்றார்."

எனத் திருவேடத்தரசு திருமொழியாக இடித்துரைத்ததி லிருந்தும் சேக்கிழாரின் சொல்வைப்புத் திறன் தெள்ளிதிற் புலனாவதறிக.

'உதவான்' என்ற சொல்லையும் அடியவர்க்கு உற்றுழி உதவுஞ் சொல்லாக, அற்றங்காக்குஞ் சொல்லாகச் சேக்கிழார் ஈரிடங்களில் பயன்படுத்தியுள்ளார். அப்பூதி அடிகளாரது தலைமகனார் பெரிய திருநாவுக்கரசு வாழைக்குருத்தை ஈரும் பொழுதினில் அங்கையில் வாளராத் தீண்டிற்று. ஏழாம் வேகம் உயிரைக் கொள்ளைகொள்கின்ற ஞான்று தாயார்பால் குருத்தை ஈந்து உயிர் நீத்தான். இஃதிங்ஙனமாக அப்பர் உண்ணுமுன் திருநீறு இருமுதுகுரவர்க்கும் நல்கிப் புதல்வர்க்கும் நல்கும் பொழுதினில் பெரிய சேயையும் அழையுமென்ன,

" ஆதிநான் மறைநூல் வாய்மை அப்பூதி யாரை நோக்கிக்
காதலர் இவர்க்கு மூத்த சேயையுங் காட்டும் முன்னே
மேதகு பூதி சாத்த என்றலும் விளைந்த தன்மை
யாதுமொன் றுரையார் இப்போ திங்கவன் உதவான் என்றார்."

என்ற இடத்து அச்சொல் முதலிற் பயன்படுத்தப்பட்டுள்ளது காண்க.

இச்சொல் பொய் சொல்லா அப்பூதியாரின் வாய்மையைக் காப்பாற்றியது. நாளும் திருநீறிட்டு, அடியாரோடு உண்ணும் சிறுத்தொண்டர் பைரவ மூர்த்தியாம் இறைவனை உண்பிக்கத் தான் முன்னுண்ண முனைந்தார். இறைவன் தடுத்து வினவிய ஞான்று,

" ஆறு திங்கள் ஒழிந்துண்போம் உண்ணும் அளவுந் தரியாது
சோறு நாளும் உண்பீர்முன் உண்பதென்நம் முடன்றுய்ப்ப
மாறில் மகவு பெற்றீரேல் மைந்தன் தன்னை அழையுமென
ஈறும் முதலும் இல்லாதார்க் கிப்போ துதவான் அவன் என்றார்."

என்ற சிறுத்தொண்டரின் மறு மாற்றத்திலும் அச்சொல் பயிலப்பட்டிருப்பதைத் தெரிக,

உயிர்கள் இருவகையின. அவை பேசும் உயிர்கள் எனவும் பேசா ஊமை உயிர்கள் எனவும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன. பேசும் உயிரினங்களில் மனிதன் தலையாயவன். அவன் பேசக் கற்றுக்கொண்ட வரலாறு வியப்புடைத்து. முதற்கண் மனிதன் தன் கருத்துக்களைக் கைக்குறிப்புகளினாலும் பிற குறிப்பு வகைகளினாலும் பிறர்க்கு அறிவித்தான். பின் படிப்படியாகப் பேசக் கற்றுக்கொண்டான். எழுதவும் கற்றுக்கொண்டான். பேசுவதற்கு உறுதுணையாக இருந்தன சொற்கள். அச்சொற்களின் ஈட்டமே மொழி. சொற்கள் பலஎழுத்துக்களின் கூட்டமே. எழுத்துக்கள் உச்சரிக்கப்படுங்கால், பேசப்படுங்கால் ஒலிகளை ஓசைகளைப் பெற்றன. அவ்வோசைகள் செவிப்புலன் வழியாய் உணரப் பெறுவன. எனவே அவை செவிக்குறியீடுகள் (Audible Signs - Ear - Appeal) எனப்பட்டன. பலஎழுத்துக்களாலாகிய சொற்கள் எழுதவும்பெற்றன. எழுதப்பெற்ற சொற்கள் கண்களுக்குப் புலனாயின. அவை கட்புலனுக்குரிய குறியீடுகள் (Visible Signs - Eye - Appeal) எனப்பட்டன. செவிப்புலனுக்குரிய பேச்சுச் சொற்கள் எல்லாம் (Spoken - Words) ஓசை பற்றியன (Phonetic); கட்புலனுக்குரிய எழுத்துச் சொற்கள் எல்லாம் (Written-words) சொற் பொருள் பயந்து (Semantic) நிற்பன. இக் கருத்துக்களையே ஆபர் கிராம்பி (Abercrombie) தமது 'The Theory of Poetry' என்ற உரைநடை நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்.

" Language as Communicable symbolism of ideas has two modes of existence : it exists as audible signs and it exists as visible signs........................................................................
These are the two aspects of language which the learned Call the phonetic and the Semantic; they are not proserly separable, but their effects can be discriminated..................
.............................................................................................
We can avoid some of the confusion by adopting terms already mentioned: "*Semantic*" for the meaning of the Sound and "*Phonetic*" for the sound of the meaning."

மேற்கூறிய இவைகளிலிருந்து செய்யுளில் சொற்கள் செம்பொருள் பயந்து நிற்பன என்றும் ஒழுகிசையின்பம் பயந்து நிற்பன என்றும் அறிந்தோம். சேக்கிழார் புராண நடையில் இதுகாறும் சொற்களின் பொருள் பயக்கும் நிலையை ஒருவாறு சுட்டினோம். இனிச், சொற்கள் ஓசை நயம் உடைத்தாய் ஒலிக் குறிப்புக்களை எங்ஙனம் பயக்கின்றன என்பதைக் கருதுவாம். சேக்கிழார் மெல்லோசை பெருகி வரவேண்டிய இடங்களில்

மெல்லோசைச் சொற்களை அமைப்பர்; சந்தங்களையும் யாப்பமைதிகளையும் அதற்கேற்ப அமைப்பர். போர்வகைகளுக் கேற்ப வன்சொற்களையும் விரைந்து முடுகிவரும் சந்தங்களையும் அமைப்பர். திருக்கண்ணப்பரின் வேட்டையைக் குறிக்கின்ற காலத்துப் பொருளுக்கேற்ற சந்தத்தையும் சீரையும் சேக்கிழார் அமைத்துக்காட்டும் திறனுக்குக் கீழ் வரும் பாடல்கள் சிறந்த சான்றுகளாதலைக் காண்க:

"தாளறுவன விடைதுணிவன தலைதுமிவன கலைமா
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா
நீளுடல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படுமுடலெழ விழுவனபல வுழையே.
வெங்கணைபடு பிடர்கிழிபட விசையுருவிய கயவாய்
செங்கனல்விட வதனொடுகணை செறியமுனிரு கருமா
அங்கெழுசிர முருவியபொழு தடலெயிறுற வதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள்."

போர் முனையைச் சொல்லோவியப்படுத்துங்கால் சுருங்கிச் செறிந்த சொற்போக்கையும் விரைந்து முடுகிய சந்தத்தையும் அமைத்துக் கொள்வர். ஏனாதி நாதனார் புராணத்தில் காண்குறாஉம்,

"வாளொடு, நீள்கை துடித்தன
மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன
தோலொடு தோல்கள் தகைந்தன
தாளொடு வார்கழ லிற்றன
தாரொடு சூழ்சிர மற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய
போர்செய் களத்தினில்."

எனும் இப் பாட்டும்,

"கயமொடு கயமெதிர் குத்தின
வயமுட னயமுனை முட்டின
வயவரும் வயவரு முற்றனர்
வியனமர் வியனட மிக்கதே.
மண்டு போரில் மலைப்பவர்
துண்ட மாயிட வுற்றெதிர்
கண்ட ராவி கழித்தனர்
உண்ட சோறு கழிக்கவே.
வரிவிற்கதை சக்கர முற்கரம்வாள்
சுரிகைப்படை சத்தி கழுக்கடைவேல்

எரிமுத்தலை கப்பண மெற்பயில்கோல்
முரிவுற்றன துற்றன மொய்க்களமே."

எனும் புகழ்ச்சோழ நாயனார் புராண இப் பாடல்களும் இவ்வகைக் குரிய தக்க எடுத்துக் காட்டுகளாம். இச் செய்யுட்களில் சொல்லும் பொருளும் யாப்பு வகைகளும் ஒத்துச் செல்லும் நெறியைக் கண்டு சேக்கிழாரின் சொன்னடை மாண்பினைச் சீர்தூக்கிப் போற்றுமின். ஒலியிசை வண்ணத்திற்கு அடியில் வருவுடம்,

" தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
ஊரொலிக்கும் பெருவண்ணா ரெனவொண்ணு உண்மையினர்
நீரொலிக்க அராஇரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க உருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும்."

என்ற திருக்குறிப்புத்தொண்ட நாயனார் செய்யுளையும் சிந்தையுள் கொள்க.

சேக்கிழார் செய்யுள்நடை மிகச் செம்பாகமானது; எளிமையுடையது; இனிமையுடையது; பொருள்கோள் எட்டும் கொண்டிலங்குவது; கடின சொற்கள்வரா, இரா. அரிமா நோக்கு, பருந்தின் வீழ்ச்சி, தவளைப்பாய்த்து என்ற சூத்திர நிலைகள் யாண்டும் காண்டலரிது. வரலாறுகளை ஆற்றொழுக்குப்போல் தட்டுத் தடங்கலின்றிச் சொல்லிச் செல்வர். செய்யுள்களுக் குரிய எதுகை, மோனை, அடி, சீர், தளை, தொடை முதலிய உறுப்புக்களை நீக்கில் உரைநடை போன்று எளிதில் நற்பொருள் பயப்பது. (தொடரும்)

---

# திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ப்புலவர் சங்கம்

## தமிழ்ப்புலவ மாணவர் தேர்வு

இத் தேர்வுகள் நிகழும் 1958-ஆம் ஆண்டு பிப்ரவரி 24-ஆம் நாள் முதல் ஆறு நாட்கள் சென்னைமாநிலத்திலுள்ள எல்லாப் புலவர் கல்லூரிகளிலும் நெல்லைக் கழகத்திலும் நடைபெறும். விண்ணப்பிக்க விரும்புவோர் பிப்ரவரி 17-ஆம் நாளுக்குள் மேற்குறித்த சங்கப் புலவர்குழுத் தலைவர் முகவரிக்கு அனுப்புக.

இங்ஙனம்,

பு. சி. புன்னைவனநாதன்

# தி. ஆ. 2000

[பண்டிதர், திரு. கா. பொ. இரத்தினம், எம். ஏ., பி. ஓ. எல்.]

இக்காலத்திலே வரலாற்றுக்கும் பிறவற்றுக்கும் கால எல்லையாகக் கிறித்துவத் தொடர் ஆண்டை மக்களிற் பெரும்பாலார் கொண்டுளர். உலக வரலாற்றிலே கிறித்துநாதர் அவதாரம் சிறந்ததொரு நிகழ்ச்சியாகக் கொள்ளப்பட்டபடியாலும், அறிவியற்றுறையிலும் அரசியற்றுறையிலும் முன்னேற்றம் அடைந்த மேலைத்தேயங்களில் வாழும் மக்களிற் பெரும்பாலானோர் கிறித்துவ சமயத்தினராகையாலும் கிறித்துவத் தொடர் ஆண்டு சிறப்படைந்து நிலைத்துளது இதனைவிடத் தமிழ்ப் பஞ்சாங்கங்களிற் பின்வரும் தொடர் ஆண்டுகளும் குறிக்கப்படுகின்றன :

சிருட்டியாதி வருடம், கலியுக வருடம், சாலிவாகன சக வருடம், விக்கிரம சக வருடம், கொல்லம் வருடம், சிசரி வருடம், புத்த வருடம். இந்தத் தொடர் ஆண்டுகள் யாவும் சமயங்களோடும் பிறநாட்டரசர்களோடும் தொடர்புடையனவாயிருக்கின்றனவே யன்றித் தமிழ்மொழியோடும் தமிழினத்தோடும் தொடர்புடையனவா யமையவில்லை.

தமிழ் அரசர்களுடைய கல்வெட்டுக்களிலே காணப்படும் காலக்கணக்குகள், அவர்கள் முடிசூடி ஆளத்தொடங்கிய ஆண்டிலிருந்தே கணிக்கப்பட்டுள்ளன. தமிழ்மக்களிடையே பெருவழக்கிலிருக்கும் சாலிவாகன சக வருடம் அக்கல்வெட்டுக்களில் இடம்பெறவில்லை.

இச் சாலிவாகன சக வருடம் சாலிவாகனன் எனும் வடநாட்டு அரசனால் இற்றைக்கு கஅஅ0 ஆண்டுகளுக்கு முன்னர் நிலைநாட்டப்பட்டதென்பர். இவ்வரசனுக்கு முன்னர்ப் பல்லாயிர ஆண்டுகளாக நயத்தக்க நாகரித்துடன் வாழ்ந்த தமிழ்மக்கள் தம் நாட்டுப் பெருமகன் ஒருவனுடன் இணைந்த தொடர் ஆண்டை நிலைநாட்ட முயலாதது பெரு விந்தையாக இருக்கிறது. வடநாட்டரசன் ஒருவன் நிலைப்படுத்திய ஒரு தொடர் ஆண்டை வரவேற்று வழங்கித் தமிழினத்தின் பழமையையும்—பண்பையும், சிறப்பையும்—செல்வாக்கையும் சிதைத்துவந்தமை பெரு வெட்கத்துக்கிடமானதாகவும் இருக்கிறது.

தமிழ்நாட்டிலே தமிழ்மக்களிடையே நிகழ்ந்த மானக்கேடான—நகைப்புக்கிடமான—செயல் இஃது ஒன்றுதானா? தமிழ்நாட்டுப் பணத்தைக்கொண்டு, தமிழ்மன்னர்கள் தமிழ்நாட்டிலே தமிழர்களுக்காகக் கட்டுவித்த கோயில்களிலே—

தமிழ்மக்கள் வழிபடும் கோயில்களிலே—தமிழ்மொழிக்கு முதலிடம் கொடுக்கப்படவில்லை. தமிழ்நாட்டிலே தமிழ்மக்களால் தமிழிசை ஒதுக்கப்பட்டுள்ளது. தமிழ்நாட்டு ஊர்களின் தனித் தமிழ்ப் பெயர்கள் பிறமொழிப் பெயர்களாக மாற்றப்பட்டுள்ளன. தமிழ்மக்களின் பெயர்கள்கூடத் தமிழ்ப் பெயர்களாக அமைய வில்லை சென்னை மாகாணத்துக்கு இன்றும் "தமிழ் நாடு" எனும் பெயர்வைக்கப்படவில்லை. வடஇந்தியாவிலே தமிழர்கள் "மதருசிகள்" என வழங்கப்படுகின்றார்களேயன்றித் தமிழர்கள் எனப் போற்றப்படவில்லை. நம் மக்களிற் பலரைப் பிடித்துள்ள "தீண்டாமைப் பேய்" இன்றும் அவர்களை ஆட்டுகிறது.

"கற்றோன்றிமண் தோன்றாக் காலத்தே......
முற்றோன்றி மூத்தகுடி."

என்று தன்னைப் புகழும் தமிழினம்—பழமை பாராட்டும் தமிழி னம்—இன்று தன் தாழ்வையும் வீழ்ச்சியையும் சிறிது சிந்தித்தல் வேண்டும். வாய்ச்சொல்லில் வீரர்களாவதிற் பயனில்லை. மானத் துடன் தலைநிமிர்ந்து வாழுதற்குவேண்டியனவற்றைச் செய்தல் வேண்டும். தமிழினத்தைச் சீர்குலைக்கும் அடிமைப் புத்தியும் அறியாமையும் நீங்குதல்வேண்டும் தமிழன் தமிழனைத் தமிழுக்கு எல்லாத்துறையிலும் முதன்மை கொடுத்துவாழுதல் வேண்டும். தமிழ் இனத்துக்கு இழிவுதரும் சின்னங்களையும் செயல்களையும் பழக்கவழக்கங்களையும் ஒழித்துவிடல்வேண்டும்.

பழமையும் செழுமையும் வாய்ந்த மொழியையும், வனப்பும் வளமும் நிறைந்த இலக்கியத்தையும், சீரும் சிறப்பும் பொருந்திய நாகரிகத்தையுமுடைய தமிழினத்துக்கு அவ்வினப் பெரியார் ஒருவருடன் தொடர்புடைய தொடர் ஆண்டு வேண்டுமென மறைமலையடிகள், திரு. வி. க. முதலிய தமிழ்ப் பேரறிஞர்கள் உணர்ந்தார்கள். திருவள்ளுவர் தொடர் ஆண்டைத் தமிழ் மக்கள் வழங்கவேண்டுமெனக் கூறினார்கள்.

பல சமயத்தவர்களாக வாழும் தமிழ்மக்கள் யாவராலும் போற்றப்படும் பெருமைவாய்ந்தவர் திருவள்ளுவரேயாவார். தமிழினம் பல்லாண்டு காலமாக வாழ்ந்து கண்ட உண்மைகளை உலகம் முழுவதும் ஏற்கத்தக்க முறையில் எடுத்துரைக்கும் நூல் அவர் இயற்றிய திருக்குறளேயாகும். இந்நூலுக்கு இணையான தொரு இலக்கிய நூல் இந்த உலகில் இல்லை. இதனாலேயே இந்த நூலைத் தந்து தமிழின் பெருமையையும் தமிழரின் சிறப்பையும் உலகறியச் செய்த திருவள்ளுவருக்கு அறிஞர் வரிசையில் முதலிடத்தைத் தமிழ்மக்கள் அன்றும் இன்றும் கொடுத்துளர். எனவே, தமிழரின் தொடர் ஆண்டு திருவள்ளுவர் ஆண்டென வழங்கப்படுதல் பல்லாற்றானும் பொருத்தமுடையதே.

திருவள்ளுவர் தொடர்ஆண்டை நாம் வழங்குவதால், ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த தமிழ்மக்களின் நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டின் உயர்வையும் நினைக்கும் வாய்ப்பைப் பெறுகிறோம். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் திருவள்ளுவர் கூறிய வியத்தகு கருத்துக்கள் ஒருவருள்ளத்திலே தோன்றுதற் கேற்ற சூழ்நிலையையும், நிலைக்களனையும் உண்டாக்குதற்கு, அவருக்கு முன்னரும் பல்லாயிர ஆண்டுகளாகத் தமிழ்மக்கள் நல்ல நாகரிகம் படைத்தவர்களாக வாழ்ந்திருத்தல்வேண்டும் என்பதையும் அறிகிறோம். சுருங்கக் கூறின் திருவள்ளுவர் தொடர் ஆண்டு தமிழினத்தின் பல்லாயிர ஆண்டு வாழ்வைப்—பண்புமிக்க நாகரிக வாழ்வை—உலகத்துக்கு உணர்த்தத்தக்கது எனலாம்.

மேலும், திருவள்ளுவர் தொடர்ஆண்டை நாம் வழங்குவதால் திருவள்ளுவரையும் அவருடைய நூலையும் அடிக்கடி நினைக்கிறோம். இந்த நினைப்பு திருவள்ளுவருடைய அறிவுரைகளை நமது வாழ்வின் வழிகாட்டிகளாகக் கொள்ளுதற்குப் பெரிதும் உதவும். சிறுவர்கள் உள்ளத்திலும் இத்தொடர் ஆண்டு, "திருவள்ளுவர் யார்? அவரை ஏன் போற்றுதல் வேண்டும்?" என்பன போன்ற ஆராய்ச்சிகளைப் பிறப்பிக்கும். இதனால் அவர்களிடத்திலே திருவள்ளுவரைப் பற்றிய அறிவு இளமையிலே உண்டாகும்; அவர்கள் வாழ்வும் வளம் பெறும்.

திருவள்ளுவரைப் போற்றுதற்கும் அவருக்கு எமது நன்றியை யுரிமைப்படுத்துதற்கும் திருவள்ளுவர் தொடர் ஆண்டு நமக்கு வாய்ப்பளிக்கிறது. திருவள்ளுவரைப் போற்றுவதாற் பிறநாட்டறிஞருடைய வியப்புக்கும் மதிப்புக்கும் ஆளாகிறோம், என்பதையும் நாம் மறத்தல் கூடாது. பிறமொழிகளில் ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய நூல்கள் சாதாரண மக்களால் இப்பொழுது படித்தறியமுடியாதனவாய்ப் போய்விட்டன. வடமொழியிலே தோன்றிய வேதங்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. நமது தமிழ்மொழியில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இலக்கியங்களோவெனில் இன்றும் நம் மக்கள் படித்தறியத் தக்கனவாயிருக்கின்றன. இவற்றுள்ளே திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் யாவரும்—குழந்தைகள் கூடப்—படித்தறியத் தக்கதாயிருக்கிறது. இந்த உலகிலே தமிழ்நாட்டிலே தான் சமயச் சார்பில்லாத ஒரு நூலை ஈராயிரம் ஆண்டுகளாகத் தலைமுறை தலைமுறையாகப் போற்றி வருகிறோம்; படித்துப் பயன் பெற்றுவருகிறோம்; பழமைக்குப் பழமையாகவும் புதுமைக்குப் புதுமையாகவும் விளங்கும் இந்நூலையும் இதன் ஆசிரியரையும் இன்றும் நாம் யாவரும் பலவாறு போற்றுகிறோம்

என்பதை அறியும் பொழுது பிறநாட்டார் திகைப்பும் வியப்பும் அடைகின்றனர். இதற்குச் சான்றாக ஒரு செய்தியினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

எமது தமிழ்மறைக்கழகம் கொழும்பில் நடத்திய ஐந்தாவது திருக்குறள் மாநாட்டிலே திருக்குறளைப்பற்றிப் பேசுதற்கு இசையுமாறு உலகப் பேரறிஞராகிய அல்பேட் சுவைச்சருக்கு எழுதினேன். மாநாட்டிற் கலந்துகொள்ள முடியாத தம் நிலைமையை விளக்கி அவர் எனக்கு எழுதிய கடிதத்தில் "ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய திருக்குறளை இன்று தமிழ்மக்கள் எவ்வாறு போற்றுகிறார்கள் என்பதை நேரிற் பார்த்து அறிய ஆவலுடையவனாயிருந்தேன்," என்று குறிப்பிட்டுளர்.

"திருக்குறளைத் தமிழ்மறை எனப் போற்றுகிறோம். அதன் ஆசிரியருக்கு ஊர்தோறும் விழா எடுக்கிறோம்; வீடுதோறும் அவர் திருநாளைக் கொண்டாடுவிக்க முயல்கிறோம்" என்று யான் அவருக்கு எழுதினேன். இச் செய்திகளை அறிந்து அவர் அளவிலாத மகிழ்ச்சியடைந்தார்.

"திருவள்ளுவரின் பெயரால் ஒரு தொடர்ஆண்டையும் நிலைநாட்டித் தமிழ் மக்கள் யாவரும் அதனை வழங்கி வருகின்றனர்" என்று பிறநாட்டார் கூறத்தக்க நிலைமையை நாம் விரைவில் உண்டாக்குதல் வேண்டும். ஆண்டை இன்று பலர் வழங்குகிறார்கள். இன்றுவரை இதனைப்பற்றி எண்ணாதவர்கள் இனித் தயங்காமல் இத்தொடர் ஆண்டை வழங்குதற்கு முன் வரல் வேண்டும்.

திருவள்ளுவர் தொடர் ஆண்டினை மறைமலை அடிகள் கணித்த முறைப்படியே இன்று நாம் வழங்குகிறோம். இப்பொழுது கசுஅசு-ஆம் ஆண்டு நடைபெறுகிறது. திருவள்ளுவர் ஆண்டு தை முதல் நாளிற் பிறக்கிறது. கிறித்துவத் தொடர் ஆண்டுத் தொடக்கத்துக்கு ருக ஆண்டுகள் முந்தித் தொடங்குகிறது. திருவள்ளுவர் தொடர் ஆண்டில் ஈராயிரம் ஆண்டு கி. பி. கசுசுசு ஆகும். திருவள்ளுவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழாவை கசுசுசு-இல் உலகம் முழுதும் சிறப்பாகக் கொண்டாடச்செய்தல் வேண்டும்.

திருவள்ளுவர் திருநாளை வைகாசி அனுடத்திலே, தமிழ்கூறு நல்லுலகம் இப்பொழுது கொண்டாடுகிறது. எனவே, கசுசுசு-இல் வைகாசி மாதம் முழுவதும் திருவள்ளுவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாடுமாறு எமது தமிழ்மறைக் கழகம் வேண்டுகோள் விடுத்துளது.

திருவள்ளுவர் ஆண்டு ஈராயிரத்துக்குமுன் தமிழ் பேசும் மக்கள் யாவரும் தமிழுக்கு எல்லாத் துறையிலும் முதன்மை கொடுத்தற்கும், திருவள்ளுவர் திருநாளை ஆண்டுதோறும் ஒவ்வொரு வீட்டிலும் கொண்டாடுதற்கும், திருவள்ளுவர் தொடர் ஆண்டை வழங்குதற்கும் முயல்வார்களாக; துளங் காது தூக்கங் கடிந்து தொழிலாற்றுவார்களாக. திருவள்ளுவர் ஆண்டு ஈராயிரத்துக்கு (தி. ஆ. உ௦௦௦) இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளே இருக்கின்றன.

" அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்." (தமிழ் மறை, சசங.)

(சுதந்திரன் பத்தாவது ஆண்டுமலர்.)

---

## மூவர்

[தமிழன்பன்]

பிறமொழிகள் பைந்தமிழில் நிறைதல் கண்டு
பொருக்கெனவே எழுந்ததனை எதிர்த்து நின்று
திறமான தனித்தமிழில் நூல்கள் செய்து
தித்திக்கச் செய்திட்ட சான்றோன்! பாரில்
பிறங்குபிற மொழியறிந்து தமிழின் சீர்மை
பெரிதென்று முரசறைந்த வீரன்! நெஞ்சில்
பிறக்கின்ற கருத்துரைக்கச் சிறிது மஞ்சா
மறைமலையின் மாண்பென்றும் வாழ்க! வாழ்க! (க)

கரையிழந்த கடல்நாணும் பரந்த நெஞ்சங்
கனிந்துருகிப் பொதுமைநெறி காட்டிப் பெண்டிர்
புரைமலிந்த வாழ்வியலைப் புதுக்க வேண்டிப்
பொன்றாத பணிபுரிந்த தூயோன்! எங்கும்
அரசியலை அருந்தமிழில் பரப்பி மாந்தர்
அகமதிலே சுரந்துணர்வு பெருகச் செய்து
விரைகமழுந் தமிழ்மாலை தொடுத்தளித்த
கலியாண சுந்தரன்பேர் வாழ்க! வாழ்க! (உ)

அடிமையிலே தமைமறந்து வீரங் குன்றி
ஆகாத பிளவுகளைப் பெருக்கிக் கொண்டு
படியெனவே பலர்மிதிக்க உணர்வு மின்றிப்
பிணமாக இந்நாட்டார் கிடத்தல் கண்டே
துடித்தெழுந்து இடிமுழக்கஞ் செய்தான் பாட்டால்!
துணிவுடனே வலிவுதந்து வழியுங் காட்டித்
துயரகலப் பணிபுரிந்த கவிதைத் தச்சன்
பாரதிதன் பெருமையெலாம் வாழ்க! வாழ்க! (ங)

---

# தமிழ்விடுதூது முகவுரை[1]

[மறைத்திரு. மறைமலையடிகளார்]

'தமிழ் விடு தூது' என்னும் இப் பிரபந்தம் இதன் ஆக்கியோரால் சீமான் இரத்தினம் பிள்ளை யென்னும் உபகாரி தமக்காற்றிய நன்றி பலவும் பாராட்டுதல் காரணமாய்த் தமிழ் நலம் துலங்க இயற்றப்பட்டது. செந்தமிழ் வன்மையிற் சிறந்து விளங்கிய வித்தியார்த்திகள் பலரையும் போற்றி யுபகரித்த தமிழ் விழைவுப் பேராண்மைபற்றித் தமிழ்த் தெய்வத்தையே அவ் வுபகாரிபாற் றூது விடுத்தற்கு அமர்ந்தனர் இதன் ஆக்கியோர்; இஃது அவர் இந்நூற் காரணப்பெயர் உரைக் குறிப்பின்கண் உரைக்குமாற்றால் நன்கறியப்படும்.

இனி இந் நூலின்கண் இதன் ஆக்கியோர் செந்தமிழ் இயல் நுட்பந்தொகுத்த தொல்காப்பியப் பேரிலக்கண வரம்பு வழாதும் செந்தமிழ் ஆக்கஞ் சிதையாது விளங்கிய சந்தச் சங்க விழுமிய இலக்கிய மரபு பிழையாதும் சொல்நுட்பம் பொருள்நுட்பம் நனிதுலங்க இயல் இசை நாடகத் தமிழ் விரிவாய் எடுத்துக் கூறியன பல. இதனைக் கற்கு மாணாக்கர் இதன் முதற்பாகப் பொருட்டொடர்பு இனிதறிந்து கோடற்பொருட்டு, அதனை வகுத்துக்காட்டி ஈண்டு ஒருசிறிது சுருங்க விளக்குவாம்.

இந் நேரிசைக் கலிவெண்பாவின் முதற்பதினாறு வரிகளில் நாமகளை விளித்து முன்னிலைப்படுத்தி, மேல் முப்பத்திரண்டு வரிகாறும் அவள் உருவங் கற்பிக்கப்படுகின்றது. செழுவிய தமிழ்மொழியே நாமகள் சிரமாம்; அம் முகத்து இருவிழிகளே எண்ணும் எழுத்துமாம்; இரு செவிகள் கந்தருவப்பாட்டும் தமிழ்பாட்டுமாம்; அணிநா தமிழ்ச்சொல்லேயாம்; முகிழ்நாசி தருக்கநூற் பயனேயாம்; மற்றை யுறுப்புகள் மற்றைத் திசையில் வழங்கும் மொழிகளேயாம்.

இனி 33-வது வரிமுதல் நாமகளாம் ஞானமுதல்வியின் றிருமேனிப் பொலிவினை எடுத்து விரிக்கின்றுழி, அஃது இயற்கை, செயற்கை, கற்பனை என்னும் முத்திறப்பட்டு விளங்கு மென்றார். எனவே, அந் நாமகளோடு மிக ஒற்றுமையுற்றுக் கிடக்குங் காரண சரீரமாம் இயற்கைத் திருமேனியும் அதன்

---

1. ஆசிரியர் மறைமலையடிகளார் 1906-ஆம் ஆண்டில் அமிர்தகவி, அமிர்தம் பிள்ளை அவர்கள் இயற்றிய "தமிழ் விடு தூது" என்னும் அரிய பெரிய சிறுநூற்கு எழுதிய முகவுரை நம்மனோர்க்குப் பெரும்பயன் விளைக்குமாதலின் அது தொடர்ந்து வெளியிடப்பெறும்.

மேல் உறையாய்ப் பொதிந்து அதனுல் நடைபெறும் பெற்றித் தான சூக்கும சரீரமாகும் செயற்கைத் திருமேனியும், அச் சூக்குமத் திருமேனியின் கவிப்பாய் அதன் நிகழ்ச்சிகளைக் கசிந்துருகும் அன்பர்க்கு எளிது புலப்படுத்துந் தூலசரீரமாங் கற்பனைத் திருமேனியும் ஈண்டுக் கூறியவாருயிற்று. இவை மூன்றனுள் நாமகட்கு இயற்கைத் திருமேனியாதற்குரிய கிழமை பெரிதுடையது தமிழ்மொழி யொன்றேயாமென்ருர். என்னை? படைப்புநாட் டொடங்கி மக்கள் இயற்கையான் வழங்கத் தோற்றமுற் றெழுந்து, ஏனைப் பண்டைமொழிகளெல்லாம் வழக்குவீழ்ந்து இறந்தொழியத் தான் என்றும் ஒரியல்பினதாய்க் 'கன்னித்தமிழ்' என்னும் பெயர்பூண்டு நடைபெறுதலின் என்க. பண்டைமொழிகளான இலத்தீன், கிரீக்கு, ஆரியம் முதலாயின இறந்துபடவும், அவற்றிற்கும் முற்பட்டுத் தோன்றிய தமிழ் சிறிதும் வடுப்படுதலின்றி இன்றுகாறும் நடைபெறல் அஃது இலேசிலே உச்சரிக்கப்படுதற்குரிய ஓசையமைதியும், பிற நலங்களும் பொருந்தப் பெற்றமையினுலேயாம். இதுபற்றி யன்றே தாமியற்றிய மனேன்மணீய நாடகக் காப்பியத் தமிழ்த் தெய்வ வணக்கத்தில் தத்துவநூற் பண்டிதர், சுந்தரம்பிள்ளை யவர்கள்,

"பல்லுலகும் பலவுயிரும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோற்
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே."

என்று நன்கெடுத்துக் கூறினுர். இன்னும் தமிழ் ஒன்றே எல்லா மொழிகளினும் ஓசைநலமும் முதலுற்பத்தியு முடைத்தென்பது எமது ஞானசாகரப் பத்திரிகையின் முதற்பதுமத்தில் "தமிழ் வடமொழியினின்று பிறந்ததாமா?" 'தமிழ் மிகப் பழைய மொழியாமென்பது' என்னும் உரைகளில் மிக விரித்து விளக்கினும். அவையெல்லாம் ஈண்டு எடுத்துக்காட்டலுறின் இம் முகவுரை மிக விரியுமென வஞ்சி விடுத்தாம். இதுநிற்க,

இனி நாமகட்குச் சூக்கும செயற்கைச் சரீரமாவது இது வென்று 45-வது வரிமுதல் விளக்குவான் புகுந்தனர். 'தமிழ் மொழியின் திரிபாய் அவ்வந் நாடுகளிலிருந்தோர் தமக்கு இசைந்தவாறு இயற்றிக்கொண்ட குடகம், தெலுங்கம், கன்னடம், துளுவம் என்னும் செயற்கை மொழிகளே அவ் வம்மையின் செயற்கையுடம்பாம்.

(தொடரும்)

# தமிழ்த்தாய் முடிசூட்டுநாள் வாழ்த்து

[வித்துவான். திரு. பெ. கோவிந்தன்]

செந்தமிழ்த் தாயே செந்தமிழ்ச் செல்வி
பைந்தமிழ்ப் பாவாய் பாரில்நீ வாழ்க
முன்னந் தோன்றிய மொழியுள்முன் தோன்றிப்
பின்னர்த் தோன்றிய பிறமொழி யிறக்கவும்
கன்னியாய் விளங்கும் கரும்பே வாழ்க
மக்களைப் பாழ்த்த மாக்களாக் காமல்
தக்க நெறியிற் சாருமா றுணர்த்திப்
புத்தேளி ராக்கும் பூங்கொடி வாழ்க.
நடைபயில் தாளில் நலமலி சிலம்பும்
தொடைபுனை முடியில் சூளா மணியும்
இடையில் மேகலையும் இலங்கப் புனைந்து
கடைபடா முப்பால் கையி லேந்தி
அடைவார்க் களிக்கும் அன்னாய் வாழ்க.
செப்புதற் கெளிமையும் செவிகளுக் கினிமையும்
ஒப்புங் கருத்தின் ஆழ முடைமையும்
உடையநின் னுரைகளை உணர்ந்த மன்னரும்
குடிகளும் நினக்குமுன் முடிபுனைந் திறைஞ்சினர்
செந்தமிழ் நாட்டில்நீ செங்கோல் செலுத்தி
வந்தநாள் மக்கள் மகிழ்ச்சியில் திளைத்தனர்.
மாற்றலர் நண்பர் மற்றைநொது மலர்க்கும்
வேற்றுமை யின்றிநீ நல்லறம் விளம்பலின்
ஆன்கன் றுயிரினுக் கழிவினைப் புரிந்த
தான்பெறு புதல்வனை ஒருவன் தபுத்தனன்.
முன்செய் வினைக்கு முதியோர் மொழிப்படி
தன்னருங் கையினை ஒருவன் தடிந்தனன்
நாடுவார்க் கெல்லாம் நன்மை புரியும்
பீடுறு மன்னாய் பெற்றநின் மக்களில்
பாட்டிற் புகழ்ந்த பாவலற் கொருவன்
நாட்டையு மரசையும் நல்கி நின்றனன்.
மயில்நடங் கண்டவன் துகிலுவந் தளித்தனன்
துயருறு முல்லைக் கொருவன்தேர் நல்கினன்
இகழ்ந்த பகைவர் இசைகெட வன்மை
மிகுந்தநின் மைந்தரை மேற்செல் வித்து
வென்றபின் அவர்தம் பொன்றிகழ் தலைமிசை
இருங்கல் லொடுநீ ரேற்றிக்கொணர் வித்த

அருந்திற லன்னாய்நின் ஆண்மைகண் டுவந்தனம்
புலவர் முனம்நினைப் புகழ்ந்த பனுவல்நின்
நலமலி அறம்கொடை வன்மையை நவிலும்
நின்னுடை யாட்சியை நினைக்குந் தோறும்
இன்பம் பெருகும்; எழுச்சி தோன்றும்
உன்குடை நீழலில் உறைந்தோர் நோற்றோர்.
அன்னாய் வினையேம் ஆற்றவும் கொடியேம்.
மான மின்றி மாக்களாய் வாழ்தும்
ஊனுட லிருந்தென்? ஒழிந்தென்? உயர்விலம்
வல்லொலி மொழிபகர் வடமொழி யாட்டியின்
நல்லுரை யெமக்கு நஞ்சா யினவே.
விண்ணடை வழியை வேட்டு, வியக்கும்
மண்ணுறை வாழ்வை மறந்தனம்; தாழ்ந்தனம்.
வகுப்பு வெறியும் வாழ்க்கைக் குதவாக்
கருத்தும் காட்டிய காரிகை யுரையினால்
தன்னிக ரில்லா நின்னை மறந்தனம்
ஆங்கில மாதெமை அடிமைப் படுத்தி
நீங்காப் பழியை எம்மிடை நிறுத்தினள்
உரிமை வேட்கை யுலகிடை யெழுந்தது
பெருகவ் வேட்கையால் நாட்டைப் பெற்றனம்
நாட்டைப் பெற்ற நனிபெரு மகிழ்வால்
பாட்டுடை நின்னிடைப் படர்ந்தனம் அன்னாய்
மீண்டும் தமிழ்த்தாய் மேதக வாட்சியைக்
காண்டற் கியலுங்கொ லென்றுமுன் கருதினம்.
கருதிய எமதுமுன் கனவுநன வாயிற்று
குருடன் இருவிழி கொண்டாங் கெழுந்தனம்
பெரும்பொருள் வறிஞன் பெற்றாங் குவந்தனம்
மழலை மகாரும் மகளிரும் மைந்தரும்
கிழவரும் தமிழ்மொழி வாழ்கெனக் களிப்பரால்.
சட்ட மன்றச் சான்றோர் பலரும்
நட்பொடு நாடாள் நல்லமைச் சர்களும்
நெய்ப்பொங்க லட்டுணும் தைப்பொங்க லன்று
ஒப்பரு மணங்குனக் குயர்முடி புனைந்தனர்
செயற்கருஞ் செயலைச் செய்தவர் வாழ்க
உயர்ச்சியும் அறங்கொடை உரமும்
முயற்சியும் யாம்பெற முன்போல்வா ழியவே.

---

# சீக்கியம்

[திரு. P. பச்சையப்பன்]

'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்' என்று அப்பர் பாடுவதற்குக் கடவுளின் தொண்டன் என்ற ஒன்றே ஆற்றல் தந்தது. அவ்வாறு கடவுளின் அருள் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டெழுந்த அன்புமதம் சீக்கியமதமாகும். சீக்கிய மதத்தைப் பற்றித் தமிழகத்தில் தெரிந்தவர் மிகச் சிலரேயாவர். எனவே அம்மதத்தைப் பற்றி அறிந்து கொள்ள இக் கட்டுரை உதவும்.

பல நூற்றாண்டுகளாக இந்திய நாட்டின் மதம் இந்துமதம் என்றிருந்தது. பின் வடக்கே முகமதியர் படையெடுத்து, தம் மதத்தை நிறுவலாயினர். கடவுள் ஒருவரே, அவருடைய கொள்கைகள் பரப்பும் தீர்க்கதரிசி முகம்மது என்பதும், கடவுளின் அருளிச் செயல் கொரான் என்பது முகம்மதியக் கொள்கை. ஒரே கடவுட்கொள்கையை வற்புறுத்துவதும இந்நாட்டவர் உருவ வழிபாட்டினை வெறுப்பதும் அனைவரும் ஒருகுலம், உண்பதும் மகிழ்வதும் மனித இயல்பு என்பதும் கொரானின் சிறந்த கொள்கை. பல உருவங்களின் இறைவனை வழிபடுவதும், பற்றற்று வாழ்வதற்கு முயல்வதும் இந்து சமயத்தின் பண்பு. இவ்வாறு இருவேறு பிரிவுகளாகும், இருபெரு சமயத்தினருக்கும் பல நூற்றாண்டுகள் பகை நிறைந்து போர் நடந்து வந்தது எனலாம். வடநாட்டில் பதினைந்தாம் நூற்றாண்டின் துவக்கத்தில், பல்லாயிரக் கணக்கானவர் முஸ்லிம்களாயினர். ஆயின் அவர்களில் பெரும்பாலோர் இந்துசமயக் கோட்பாடுகளையும் ஒருவாறு பின்பற்றினர். அதுபோன்றே முகம்மதிய மதத்தின் ஒரு கடவுட் கொள்கையையேற்றுப் பலவருணப் பாகுபாட்டையும், மூடக்கொள்கைகளையும் களைய அறிஞர்கள் முயன்றனர். அவர்களைப் பக்த மார்க்கிகள் எனலாம். ராமானந்தர், சைதன்யர், கபீர், துளசிதாசர், நாமதேவர் ஆகியோர் இருபெரு சமயங்களினின்றும், எடுத்த உயர்ந்த கருத்துக்களை வழங்கியருளினர்கள். ஆயின், அவர்களின் இயக்கம் தொன்று தொட்டு வளர்ந்துவர குருபரம்பரை தோன்றவில்லை. இக்குறையை நிறைவேற்றிய குருநானக் (௧௪௬௯—௧௫௩௯) சீக்கிய மதத்தைத் தோற்றினர்.

குருநானக் மற்றைய பக்தி மார்க்கிகள் போன்றே சருவசமய சமரசநோக்கினைப் பரப்ப முற்பட்டனரே யன்றித் தனியே புதிய

தொரு வகுப்பினைத் தோற்ற நினைத்ததில்லை. ஆயினும் பஞ்சாபி லிருந்த குடியானவர்களுக்கு அவருடைய கருத்துரைகள் உவப்பாயிருந்தன. அவர் காலத்திலேயே பலர் அவரைப் பின் பற்றுவாராயினர். அவர்கள் முதலில் 'சிஷ்யர்'களாக மட்டும் இருந்தனர். பின்னரே சீக்கியர் (சிஷ்யர்களின் திரிபு) என்னும் தனி மதத்தினராயினர்.

குருநானக் தமக்குத் தெய்வத் தன்மையுண்டு என்று கூறிக் கொண்டதில்லை தம் வாக்கு கடவுள் வாக்கு என்று அறிவித்துக் கொண்டதுமில்லை. தூயவாழ்வு வாழ்ந்தும், மூடக் கொள்கைகளைக் கண்டித்தும் அறநெறியைப் போற்றியும் தம் சிஷ்யர்களுக்கு வழி காட்டினர். அவருடைய கருத்துரைப் பாக்கள் பஞ்சாபி மொழியில் அழகுற அமைந்திருந்தன. அவருக்குச் சாதிமத வேறுபாடுகளில் நம்பிக்கையில்லை, அவருடைய திருக்கூட்டத்தில் ஒரு முஸ்லிம் பாடகனும், இந்து சமயக் கீழ்வருணத்தானும் இருந்தனர். தீர்த்த யாத்திரை உப நயனம், பிதுர்க்கடன் முதலியவற்றை அவர் விரும்பவில்லை. முஸ்லிம்கள் கூடுமிடத்தில் மக்கள் குரானில் சொல்லியவற்றிற்கு மாறுக நடப்பனவற்றைக் காட்டிக் கண்டிப்பார். இந்துக்களிடம் அவர்களுடைய குறைகளைக் கூறித் திருத்த முயல்வார். எனவே அவர் இறந்துபோன பொழுது முஸ்லிம்கள் அவரைப் புதைக்க விரும்பினர். இந்துக்கள் கொளுத்த விரும்பினர். இன்றும் இந்துமுஸ்லிம் ஒற்றுமைக்கு எடுத்துக் காட்டாகப் பஞ்சாபில் கொண்டாடுவர். ஐம்பதாண்டுகள் அவர் தம் கொள்கைகளை விடாது பரப்பினர். பின்வந்தோர் தமக்கென மொழி, இலக்கியம், சமயம், வழிபாடாற்றும் முறை முதலியனவற்றை வகுத்துக்கொண்டனர். குருநானக்குக்குப்பின் ஒன்பது குருமார்கள் தோன்றினர். இருநூறு ஆண்டுகள் அறிஞர்கள் தோன்றிச் சீக்கிய சமயக் கொள்கைகளைப் பரப்பிவந்தனர்.

கசுசுகூ இல்-பத்தாவது குரு, கோவிந்த சிங்கர் தம் மக்களைக் கூட்டி "ஐந்து அன்பர்கள்" என்னும் ஒரு குழுவினை அமைத்துத் 'தூய்மையது' என்னும் பொருள்படும் 'காலசம்' என்னும் கழகத்தினை அமைத்தார். அவ்ஐவரில் ஒருவர் பிராமணர், ஒருவர் க்ஷத்திரியர், ஏனையோர் கீழ்வருணத்தவர். ஒரு குவளையில் அவ் ஐவரும் குடிக்கவும், 'சிங்கன்' என்னும் பெயர் கொள்ளவும் வைத்தார். அவர்கள் பஞ்ச'க'ரங்களைச் செய்வதாக வாக்குக் கொடுத்தனர். அவை கேசம் வளர்த்தல், சுங்கம்(சீப்பு)வைத்துக் கொள்ளுதல், குச்சம் (குறுகிய காற்சட்டை) உடுத்தல், வலது கரத்தில் இருப்பு வளையணிதல், கிருபான் (கத்தி) வைத்துக் கொள்ளல் என்பனவாம்.

சீக்கியர் என்போர் பதின்மர் குருமார்களையும், கிரந்த சாஹிப் என்னும் சமயநூலினையும் போற்றுவோர் எனப்படுவர். கேசம் வளர்த்துக் கொள்ளாத சீக்கியர் சகஜதாரிகள் ஆவர். பழமை விரும்பிகள் காலசர்கள் என அவர்கள் இருவகையினராக இன்று விளங்குவர். இவர்களுடைய சமயநூல் இஸ்லாமிய இந்துசமய உயர் கருத்துக்களைத் திரட்டியதாகும். சமயச் சடங்கு தொடங்குங்கால் சொல்லப்படும் மூல மந்திரமாவது,

கடவுள் ஒருவனே, அவனே உண்மை
படைப்பவன் அவனே, பயமொன் றிலாதான்
வெறுக்கவுஞ் செய்யான் எங்கும் இருப்பவன்
பிறப்பிலி இறந்து பிறவா தான்அவன்
காலத்திற்குமுன் உண்மை இருந்தது
காலந் தொடங்கவும் உண்மை உறுத்தது
இன்றும் உண்மை அவன்தான் இனியும்
நன்றவ் வுண்மை நாட்டில் நிலவுமே. (நானக்)

மேற்காட்டிய மூலமந்திரத்திற்குப்பின் காலை வணக்கம் சொல்லும் முதற்பா வருமாறு :

எண்ணு நூறுயிரம் எண்ணத்தால் மட்டும்
அண்ணலைக் காணுதல் ஏலாது; மற்றும்
உன்னிய மோனத்தால் தவத்தால் ஆகாது;
விரதம் இருந்து விழுமம் பெறலாம், ஆயின்
உண்மை அறியும் வேட்கை தணியாது
பண்ணும் ஆயிரம் வழிகளில் கடவுளைக்
காணுதல் இயலாது; கருத்தை மூடிய
திரையை விலக்கத் தீட்டிய வழியாம்
நானக்! நினதுநல் அறஞ்சேர் வழியே!

சீக்கிய மதம் உருவவழிபாட்டைத் திட்டவட்டமாக வெறுத்து வருவது :

கல்லை வணங்கிக் கல்லைத் தூக்கி ஆடுவர்
கல்லைக் கோத்துக் கழுத்தில் கட்டிக் கொள்ளுவர்
இல்லை; தெற்கில் இருப்பன் மேற்கில் என்பரால்
பல்லைக் காட்டிப் பழியில் மூழ்கிப் படுவரால். (குரு கோவிந்தர்)

குருநானக் ஒருநாள் மாலை ஒரு கோயிலுக்குச் சென்றார். அங்கே எண்ணெய் விளக்குகளும், நறுமணங்கமழும் பொருள்களும் இருக்கக் கண்டார். அப்போது எழுந்த பாடல் வருமாறு :

வான்வெளியே நீவிரும்பும் தட்டு
வான்மதியே கதிரவனே விளக்கு
பான்மைமிகும் உடுக்கணங்கள் முத்தாப்
பரவியிருந் தொளிகாலும் அன்றோ
மேன்மைமிகுஞ் சந்தனக்கா தூபம்
மேலோங்குங் காடெலாம் நின் பூக்கள்
ஊன்மதியர் சேவையிதும் என்னே
உண்மையனே பயம்போக்கும் அண்ணல்!

சீக்கியர் மனிதர்களைக் கடவுளின் அவதாரமாக வணங்கார். குருமார்களும், ஏனையோரைப் போன்றே மனிதர்கள்தாம் என்றும், எனவே தம்மை யாரும் வழிபடல் கூடாதென்றும் அவ்வப்போது விளக்கிக் கூறியுள்ளனர். குருநானக் தம்மைக் கடவுளின் அடிமை என்றே கூறியுள்ளார். குருகோவிந்தரும் தம் வாழ்வின் கருத்தை அடியில் வருமாறு விளக்கியுள்ளார்.

எல்லாம் வல்லான் இறைவன்; அடியேன்
நல்ல நினைந்து நலம்பெற நோற்பேன்
வல்ல குலத்தை வகுத்தேன்; ஆயினும்
நல்லீர் அறிவீர் நானும் மனித்தனே.

படைப்பின் அதிசயம் பார்க்கும் ஒருவன்
கடையனேன் யானே கடவுள் அறிவீர்
கடவுளின் சேவகன் காணில் உமைப்போல்
உடம்பா லழியும் ஒருவனும் யானே.

மற்றொரு பாடலில், ஏனையோர் அவதாரத் தெய்வத்தன்மை கொண்டாடியமை பற்றிக் கூறியுள்ளது:

நட்பும் பகையும் இலாதவன் நாதன்
புட்பம் தொடுத்துப் புகழ்வதுங் கேளான்
திட்டுதல் கேட்டும் சினவா தவனும்
தொட்டில் மனித்தனுத் தோன்றுவன் சொல்லீர்.

சீக்கிய மதத்தில் சாதி வேற்றுமைக்கு இடமில்லை. குருநானக் ஒரு முஸ்லிம் பாடகனையும் தம்முடன் வைத்துக் கொண்டது மேல் கூறப்பட்டது. கடவுள்முன் அனைவரும் ஒன்றே என்பது அவர்தம் பாடல்களில் பல விடங்களில் கூறியுள்ளார்.

நாலோர் குலத்தனும் நாடிடில் ஒன்றே
மேலோர் குலத்திலுங் கீழோன் இருப்பன்
மேலோன் இருப்பனல் கீழோர் குலத்தும்
சீலனைப் போற்றுக சீரின் பொருட்டே.

மூன்றாங்குரு அங்கதர் உரைத்தது வருமாறு :

நால்வகை வருண மேனும்
நாடிடில் வித்தொன் றேயாம்
பால்வழி களிமண் ஒன்றே
பல்வகைப் பாண்ட மாகும்
காலொடு பஞ்ச பூதக்
கட்டினால் மனித னான்
மேலவன் கீழோன் என்று
மேவுதல் எங்கே சொல்வீர்.

தெய்வ வழிபாடு சீக்கியர்க்கும் இன்றியமையாதது. கடவுளின் நாமாவளியைப் பாடித் தூய்மை பெறல் வேண்டும் என்று கூறப்பெறுவர்:

கையையுங் காலையுங் கழுவுதல் போலே
அழுக்கெடுத் தாடையை உடுப்பது போலே
பாடி யவன்குணம் பரவுக நீநின்
பாவம் போக்கிப் பயன்பெறும் பொருட்டே.

ஆயினும், இல்வாழ்க்கையில் இருந்து கொண்டே தம்தம் கடமைகளைச் செய்துவர வேண்டுமென்பது சீக்கியர் கொள்கை. நானக் கூறியுள்ள வாக்கு :

யோகி அணிந்திடும் அங்கியில் இல்லை,
யோகி தூக்கும் கோலிலும் இல்லை,
யோகி பூசும் நீறிலும் இல்லை,
மொட்டை அடித்த தலையிலும் இல்லை,
ஊதும் சங்கொலி தன்னிலும் இல்லை
உண்மை சமயத் துறபொருள் அறிந்திடத்
தூய வாழ்வினைத் துணைக்கொள வேண்டுமே.

சீக்கியமதம் இவ்வாறு அமைதியை நாடுவதாயினும் வாளேந்திப் போரிடவும் தயாராக வேண்டும் என்பது குரு கோவிந்தரின் கட்டளை. அக் காலத்திய நாட்டின் நிலைமைதான் அவ்வாறு தம்மை முகலாயக் கொடுங்கோன்மையினின்றும் தடுத்துக் கொள்ளத் தூண்டிற்று என்று சரிதம் சொல்லும்.

ஜபஜி என்பது காலை வணக்கம். அது கிரந்தசாகிபின் முதல் அத்தியாயமாகும். குருநானக்கின் வாக்கு. சூரிய உதயத்திற்கு முன் பாடப்பெறுவது. கிரந்தசாகிபின் மற்றப் பகுதிகள் போன்று இசைத்துப் பாடப்படுவதில்லை. முன் சொல்லிய 'கடவுள் ஒருவனே' என்று தொடங்கும் மூலமந்திரஞ்

சொல்லி, பின் ௩அ-பாடல்களைப் பாடிப் பின் கீழ்வரும் சுலோ கத்துடன் முடிவது :

காற்று நீர் நிலம்
என்னும் இவற்றால் நாம் ஆனோம்
குருவின் வாக்குப் போன்று
நீர்வளம் பெருகும்
நிலத்தில் தோன்றிய
குழந்தை வாழ்வுககுக் காற்றே மூச்சாம்
இரவும் பகலும் நம்மிளம் பருவத்தைக்
கருத்துடன் காக்கும் வளமார் செவிலிகள்
அவர்கள் மடியில் உலக அரங்கில்
ஆடுவம் நாமே;
நாம் செயும் நல்லதும் பொல்லதும்
நின்னால் சீர்தூக்கிப் பார்க்க வருமே.
நின்னருகே சிலர், தூரத்தே சிலர்.
உன்னை வணங்கினவர் உழைப்புத் தீர்ந்தது
நானக அவர்முகம் ஆனந்த ஜோதி
அவர்கள் மற்றவர்களின் கட்டினை நீக்குவர்.

---

## இன்பத் திளைப்பு!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

அந்திப் பொழுது முந்தி யொருநாள்
கடலின் ஓரம் காற்றினை நுகரச்
சென்ற பொழுது துன்றிய காட்சி
என்னே என்னே இயல்வது மென்னே !
அலைகள் அசைந்து அசைந்து வருவதும்
படகுகள் படர்ந்து படர்ந்து செல்வதும்
கடலை முந்திரி விற்பவர் கரையில்
பற்பல ஒலிகள் முற்பட இசைப்பதும்
கரும்புச் சாற்றினை இரும்பொறி பிழிவதும்
குழந்தைகள் மணலில் குதித்தா டுவதும்
உரத்தை நல்கிடும் உப்புவிளை யாட்டும்,
ஒலிபெருக்கி யதனில் உலகச் செய்தியொடு
செவியமு தூட்டும் செழுமைப் பாடலும்
கண்டுங் கேட்டும் நுகர்ந்தின் புற்றனன்;
என்றும் இதுபோ லின்பத் திளைப்பு
அருளிட வேண்டும் அன்புரு வோனே !

---

# மறைமலையடிகளின் மணிமொழிகள்

(செல்வி, சிலம்பு - ௯௨, பரல் - ௫, ௨௨௯ - ஆம் பக்கத் தொடர்ச்சி)

(௫௨) வெயிலுக்குங் குளிருக்குந் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடாத நிலைமையிலுள்ள பறவைகளுக்கும் விலங்குகளுக்கும், அவற்றின், நிலைமையை நன்குணர்ந்த அருட்பெருங் கடலாகிய கடவுள், அடர்ந்த மயிரைப் போர்வைபோல் உடம்பெங்கும் வளரச் செய்திருக்கின்றார்.

(௫௩) வெப்பம் மிகுந்த வேனிற்காலத்தில் பகலிற் பதின்மூன்று நாழிகை முதல் இருபத்திரண்டரை நாழிகை வரையில் எங்குந் திரியலாகாது: அப்போது குளிர்ந்த நிழலுள்ள இடங்களிலேயே இருத்தல் வேண்டும்.

(௫௪) ஒளியானது எல்லா உயிர்களின் உயிர் வாழ்க்கைக்கும் இன்றியமையாததாகும். வெளிச்சம் இல்லையானால் உலகத்தில் எவ்வகையான தொழிலும் நடைபெறாது.

(௫௫) பகலவ னொளிமட்டும் இல்லையானால் மக்களெல்லாருங் குருடரினுங் கீழ்ப்பட்டவராவர். குருடராவது பிறருதவியினால் இங்குமங்கும் இயங்க இடம்பெறுவர். கதிரவனது ஒளியை இழந்தவரோ தமக்கு வேறு துணை கிடைப்பது கூடாமையால் இருந்தவிடம் விட்டுப் பெயர்தற்கும் ஏலாதவராயிருப்பர்.

(௫௬) பகலவன் ஒளி உடம்பின்மேற் படும்படியாக, மேல் அணிந்த உடைகளைக் களைந்துவிட்டு வெயிலில் உலாவுதல் இரத்தந் தூயதாவதற்குச் சிறந்த வழியாகும். ஏனென்றாற், பகலவன் ஒளியிற் கட்புலனுக்குத் தெரியாதபடி எங்கும் பரவிக் கொண்டிருக்கும் விந்து என்னும் மிக நுண்ணிய பொருளானது மயிர்க் கால்களின் வழியே உடம்பினுட் புகுந்து இரத்தத்தைத் துப்புரவு செய்து உள்ளமைந்த கருவிகளை வலிவேறச் செய்கின்றது.

(௫௭) இக்காலத்துப் புது நாகரிகத்தினால் விழுங்கப்பட்ட நம்மனோர் தமதுடம்பை உச்சந்தலையிலிருந்து உள்ளந்தாள் வரையிற் பலவகை உடைகளால் நன்றாக மூடிக்கொள்கின்றார்களாதலால், வெயிலி னொளியே அவர்கள்மேற் சிறிதாயினும் படுதற்கு இடம் இல்லாமற்போகின்றது. போகவே உடம்பின் வளர்ச்சிக்கு இன்றியமையாத் துணையான விந்துவானது போதுமான அளவுக்கு உட்செல்லக் கூடாமையால், ஏற்கனவே உடம்பிற் புகுந்த நச்சுப்புழுக்கள் இறவாமல் ஒன்று பல்லாயிரமாய்க் கிளைத்து உடம்பை நோய்க்கு இரையாக்குகின்றன.

(௫௮) பகலவன் வெளிச்சம் நம்மேற் படும்படி செய்து கொள்வது நமதுடம்பினைப் பொன்னுருவாக்குதற்கு இன்றியமையாத தொன்றுமென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெற்றென விளங்கற்பாலதேயாம்.

(௫௯) நாடோறுமாயினும் ஒரு கிழமைக்கு மூன்று முறையாயினும் வெயிற்காய்ந்து வந்தால் உடம்பிலுள்ள நச்சுப் பொருள்களெல்லாந் தொலைந்து போகும்; இரத்தந் தூயதாகி உடம்பை உரம்பெறச் செய்யும்; தலைமேல் நரைத்திருந்த மயிர்கள் எல்லாம் நரைமாறிக் கன்னங்கறேல் என்று ஆகும். காலை வெயில் பித்தத்தையும் உச்சிவெயில் களைப்பையும் உண்டு பண்ணி உடம்பிற்குத் தீமையை விளைக்குமாதலால், இருபத்து நான்கு நாழிகைக்குமேற் பகலவன் மேல்பாற் சாயும் போது உண்டாகுஞ் சாய்வெயிலே காய்வதற்கு மிகவும் ஏற்றதாகும் என்பதனை நுண் உணர்வாற் கண்டுகொள்க.

(௬௦) நல்ல பொருளாயிருந்தாலும் அதனைப் பயன்படுத்தும் முறையும் பொழுதும் இடமும் நுட்பமாக உணர்ந்து கொள்ளாமல் உட்கொண்டால், அதுவே தீது செய்யும்.

(௬௧) நமது உடம்பு மென்மையான பொருள்களால் அமைக்கப்பட்ட தொன்றாகையால், அஃது எப்பொருளை எக்காலத்தில் ஏற்றுக்கொள்ளுதற்கு இசைவு உண்டோ அதனை அறிந்து அதற்கு ஏற்ப ஒழுகுதலே நீண்டகாலம் உயிர்வாழ்தற்குச் சிறந்த வழியாகும்.

(௬௨) நாம் காணும் பொருள்கள் நமது ஊனக் கண்ணால் காண்கிறபடியேதான் இருக்கும் என்று எண்ணுதலைவிடப் பெரிய பிழை வேறு உலகில் இல்லை.

(௬௩) கண்ணாடியிற் றோன்றும் முகமானது அதற்கு உரியதாகாமல், வெளியே மெய்யாக உள்ள ஒருவன் முகத்தினது எதிர்த்தோற்றமா யிருத்தல்போல் திங்களிடத்துள்ள ஒளியும் ஞாயிற்றினொளியின் எதிர் விளக்கமே யாகும்.

(௬௪) தாயின் மனநிலையின் தன்மைக்கு ஏற்பவே அவள் வயிற்றில் உருவாகுங் கரு அழகுடையதாகவோ அழகிலதாகவோ, நல்லியல்புடையதாகவோ தீயியல்புடையதாகவோ இனிய அறிவுடையதாகவோ இன்னா அறிவுடையதாகவோ பிறந்து தனக்கும் பிறர்க்கும் நன்மை தீமைகளைப் பயவா நிற்கின்றது.

(தொடரும்)

## கடிதம் - கரு

பல்லாவரம்,
6-3-1931.

**அன்புருவாய்த் திகழும் மாணிக்கத்திற்கு அம்பலவாணர் திருவருளால் எல்லா நலங்களும் மேன்மேற் பெருகுக.**

3-ஆம் நாள் நீ எழுதிய கடிதம் வந்தது. மனைவியுங் கணவனும் நலமுடன் வாழ்தலும், நல்ல மக்களைப் பெறுதலும் அவர்தம் அறிவையும் நன்முயற்சியையும் பொறுத்திருக்கின்றன. ஆதலால், அறிவு முறைகளைக் கைக்கொண்டொழுகுதல் இன்றியமையாதது. ஏழெட்டு அல்லது பத்துக் கடுக்காயை உடைத்து விதைகளை விலக்கித் தோலுஞ் சதையும் இடித்து ஓர் உழக்கு நீரிற்போட்டுக் காய்ச்சி அரையாழாக்காகச் சுண்டியபின் இறுத்துக் காலையில் அதனை உட்கொண்டால் மலக்குடல் துப்புரவாகும். இவ்வாறு பத்து அல்லது பதினைந்து நாட்கொருகாற் செய். காய்ச்சல் உள்ளபோது உணவு எடாதே.

சவ்வரிசியும் பாலும் இட்டுக் காய்ச்சின கஞ்சிமட்டும் பசியெடுத்தாற் சாப்பிடு. இதனுடன் உடம்பில் நோயுங்காய்ச்சலும் இருந்தாற் சாம்பலை வறுத்து உடம்பு முழுதும் ஒற்றடம் போட்டுக் கொண்டு போர்த்துக்கொண்டு உறங்கு. இரண்டொரு நாளில் நின்னுடம்பு நலம் உறும். பொறுக்கக்கூடிய அளவு நல்ல சூடான வெந்நீரில் முழுகு, நீயும் திருமகள் அங்கம்மாளும் 10 நாளேனும் இங்கு வந்து தங்குதல் நன்று. பிறபின், நலம்.

அன்புள்ள,
**மறைமலையடிகள்.**

## கடிதம் - கச

பல்லாவரம்,
10-8-1936.

**அன்புமிக்க மாணிக்கத்திற்குத் திருவருளால் எல்லா நலங்களும் உண்டாகுக.**

நீ எழுதிய கடிதங்கள் மூன்றும் வந்தன. யாம் நேரிற்றெரிவித்த படி நீ செய்வதானல் மட்டும் நீ நம்மோடுடன் நின்று தமிழ்த்தொண்டு சிவத்தொண்டு செய்தல் கூடும். புதிய நன்முறையில் ஆராய்ந்து, ஆராய்ந்தவைகளைத் தனித்தமிழ் உரைநடையில் அழகுற எழுதி, எழுதியவைகளைத் தாமே பதிப்பிட்டு வெளியிடுவார் எம்போற் பிறரிருந்தால் அவர்க்கு, இவற்றால் உண்டாகும் உழைப்பும் பொருட் செலவும் வருத்தமுந் தெரியும் எம்போல் உழைக்கும் வெள்ளைக் காரர்க்கே எமது தொண்டினருமை பெருமை தெரியும். விருப்ப மிருந்தால் நேரில் வந்து ஆவன செய். கடிதத்திலெழுத ஒழிவில்லை. நலம்.

அன்புள்ள,
**மறைமலையடிகள்.**

## கடிதம் - ௬

சுசீந்திரம்,
21-5-1934.

அன்புமிக்க மாணிக்கத்திற்குத் திருவருளால் எல்லா நலங்களும் உண்டாகுக.

18-ஆம் நாள் நீ எழுதிய கடிதம் இன்று காலையில் வந்தது. இங்கே எம்முடைய விரிவுரைகள் மூன்று மிகவுஞ் சிறப்பாக நடந்தேறின. எனக்காக முந்நூறு ரூபா வரையிற் செலவு செய்தார்கள். பெருந்திரளான அன்பர்கள் வந்து கேட்டுப் பயன் எய்தினர். நாளைக் காலையில் இங்கிருந்து பெரும்பாலும் புறப்பட்டுத் திருநெல்வேலி சென்று, 23-ஆம் நாட் பகல் திருநெல்வேலியினின்று நேரே புறப்படும் வண்டியிற் பல்லாவரம் செல்லக் கருதியிருக்கின்றேம். இதற்கிடையில் வேறெங்காவது விரிவுரைக்காக அழைக்கப்பட்டாற் செல்ல நேரும். வழிச் செலவுட்பட எமது விரிவுரை ஒன்றுக்குக் குறைந்தது நூற்றைம்பது ரூபாவாவது நீ திரட்டியனுப்பக் கூடுமானல் மட்டும் யாம் சேலம் வரக்கூடும். அங்ஙனஞ் செய்யக்கூடுமானாற் பல்லாவரத்திற்குத் தெரிவி. அடுத்த சூன் திங்கள் திருநெல்வேலியிற் கூடப்போகுஞ் "சென்னை மாகாணத் தமிழர் மாநாட்டின்" புலவர் பேரவைக்குத் தலைமைபூண யாம் இன்னும் 20-நாளில் இப் பக்கம் மீண்டும் வரவேண்டும். அறிவு முயற்சியுந் தொழின் முயற்சியும் என்னும் இருவகை முயற்சியில் நிற்பாரில், முன்னையதில் நிற்பார்க்குப் பின்னையதில் நிற்பார் எவ்வகையாலேனும் பாடுபட்டு முயன்று பொருள் திரட்டித்தந்தால் மட்டும் அறிவு முயற்சி செவ்வனே நடைபெறும். தொழின் முயற்சியுடையார் தாம் செய்ய வேண்டிய முயற்சியை நன்கு செய்யாமல், தமக்குள்ள பணமுடையையே சொல்லிக்கொண்டு அறிவு முயற்சியுடையார்க்கே எல்லாத் தொல்லையையும் விளைவித்துக் கொண்டிருந்தால் அறிவு முயற்சி நடைபெறுதல் யாங்ஙனம்? நன்றாக உணர்ந்து பார். வேண்டுமாயின் அறிவுமுயற்சியுடையார் தொழின் முயற்சியுஞ் செய்தல் கூடும். ஆனால் தொழின் முயற்சியுடையரோ அறிவுமுயற்சியுடையார் செய்யும் அரும்பெருஞ் செயல்களைச் செய்ய மாட்டுவார் அல்லர். நலம்.

அன்புள்ள,
மறைமலையடிகள்.

---

# அறம்

[திரு. நாகை - வேலன்]

அவனியின் அறிஞர் ஆய்ந்து தெளிந்து
பகுத்தும் விரித்தும் பலபடக் கூறிடும்
அறமெனப் படுவது யாதெனக் கேட்கின்
அறிவினை இறைவன் ஆம்என ஓர்தல்
அறவோர் பெருமை அறிந்து ஒழுகல்
அறத்தா றிதுவென அறிந்து தெளிதல்
அன்புடை இல்லறம் அழகுடன் நடாத்தல்
அறிவுடை மக்களை அவனிக் களித்தல்
முதலிய பணியொடு முன்னுதற் கருவியாம்
அகத்திடை மாசு அகற்றி நாளும்
வருவிருந் தோம்பும் திருவின ராகி
இனியவை கூறி இன்னா தொழித்து
நன்றி யறிந்து நடுநிலை நின்று
உயர்நிலை எண்ணி ஒழுக்கம் பேணி
உலகிய லறிந்து உற்றது செய்தே
ஒப்புர வறியும் உயர்வாழ் வதனில்
பயனில கூறாப் பண்பின ராகிப்
பாத்தூண் வழங்கிப் பல்லுயிர் ஓம்பி
ஈத்து உவக்கும் இன்பம் நாடி
இசையினை எச்சமாய் ஈட்டி மகிழ்ந்து
பொல்லாக் கொலையும் புலையும் நீக்கி
நில்லா வாழ்வினை நினைந்து பார்த்தே
எல்லார் தமக்கும் இனிதே விளைத்து
எப்பொரு ளிடத்தும் மெய்ப்பொருள் கண்டு
இருவேறு உலகின் இயற்கை உணர்ந்துநல்
ஏற்புடை வாழ்வு வாழ்ந்திடல் வேண்டும்
இவையே அறத்தின் அடிப்படை ஆம்என
அறிந்திடல் நன்றே அறிந்திடல் நன்றே.
அறிந்த பின்னர் அவ்வழி நிற்றல்
அதனினும் நன்றே அதனினும் நன்றே.

---

# அவ்வையார்

[நெல்லை. திரு. க. சுப்பிரமணியன்]

*பின்றைக் காலத்தில் இருந்த சின்னஞ் சிறிய புலவர்களுள் ஒருவர், அவ்வையார் என்பதும்; நக்கீரர், கல்லாடர் என இடைக்காலத்து எழுந்துலவிய புலவர் பெயர்போலவே, சங்கப் புலவர் பெயர் தமக்கு வைத்து வழங்கித் தமிழகத்து வாழ்ந்த அவ்வையார் அவர் என்பதும் அறியற்பாற்று.*

*சங்கத் தமிழ் நாட்டில் எங்கும் புகழ் சிறந்து திகழ்ந்தவர், அவ்வையார். அவரது இயற்பெயர் ஈதென அறியுமாறில்லை. அவர், பெண்பாற் புலவராக இருந்தமையானும்; பெருமுது பருவமெய்திய ஞான்றும் திருமணம் புரிந்ததற்கு ஏதொரு சான்று தானும் இன்மையானும்; அதியமான், ஒருகால் தன்னை யுண்டாரை நெடிது வாழச்செய்யும் நெல்லிக்கனி பெற்று, அதனை அவ்வையார்க்கு ஈந்து நீடினிது வாழச் செய்தமையானும்; அவர், தண்டமிழ் மக்களே தம் மக்கள் என நினைந்து, அருள் கனிந்து எழுகின்ற பாக்களால் பார் முழுதும் பகுத்தறிவு பரப்பியமையானும்; அக் காலத்துச் செந்தமிழ் மாந்தரும் வேந்தரும், அவரைத் தம் அரும்பெறல் அம்மையென வாழ்த்தி வணங்கினர். அம்மை என்ற முறைப்பெயர் அவ்வை என்றாகி, ஆர் விகுதிபெற்றுச் சிறந்து அவ்வையார் என வழங்கிற்று.*

*"தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி" என்பது சிலப்பதிகாரம். செம்மை என்ற பண்புப் பெயரின் மெல்லிய இனிய சொல்வடிவே, செவ்வை என இளங்கோ அடிகள் இயம்பினர். அதுபோல் அம்மை என்ற முறைப்பெயர் அவ்வை யென ஆயினமை தெளிக.*

*ஐ ஔ என்ற இரண்டு எழுத்துக்களும் மிகப் பழங் காலத்தில் இல்லை (எழுத்தின் கதை-மு. வ. பக்கம் 38) என்ப தாலும்; 'அவ்வை' முந்திய வடிவம்; ஔவை அதன் போலி (தொல். எழுத்து. நச் உரை-அடிக்குறிப்பு: பாவாணர் பக்கம்-51.) என்பதாலும்; துவக்கப் பள்ளி மாணுக்கர்களும் மயக்கமும் தயக்கமும் இன்றி அவ்வை என்ற சொல்லை எளிதாய் எழுத முடிவதாலும்; அங்ஙனம் எழுதினும், பொருள் சிறிதும் மாறுபாடடையாமல் எவரும் தெற்றெனத் தெரிந்து கொள்ள லாம் ஆதலாலும், முந்தியதும் மொழிப்பொருட் காரணஞ் சிவணியதும் ஆகிய அவ்வையார் என்ற சொல்வடிவை வழங்கு தல், தப்பு என்று தள்ளத் தக்கதன்று என்றும் ஒப்பு என்றுரைத்துக் கொள்ளத்தக்கதாம் என்றும் இங்கெடுத்து நாட்டப்பட்டது.*

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) இந்திமொழி பற்றி அமைச்சர் சுப்பிரமணியம் கருத்து

“இந்தி பேசப்படும் பகுதிகளில் அதை 1965-ஆம் ஆண்டிற்குப்பின் மாநில ஆட்சிமொழியாக ஐந்து ஆண்டுகளுக்குப் பரீட்சித்துப் பார்க்கட்டும். அதன்பிறகு அதை மட்டுமே அனைத்திந்திய ஆட்சிமொழியாக்குவது இயலக்கூடியதா என்பதை யோசிப்போம்” என்று சென்னை கல்வி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், 18-1-’58-இல் பிராக்ஜோதிஷ் புரியில் கூடிய காங்கிரஸ் கூட்டத்தில் பேசியுள்ளார்.

**குறிப்பு :** இந்தி பேசப்படும் பகுதிகளில் கூட 1965-க்குப் பிறகு சோதித்துப் பார்க்கவேண்டிய நிலைமையில் நாடு இருக்கிறதென்றால் அப்படிப்பட்ட இந்திமொழி, அதுபேசப்படாத பகுதிகளில் எப்படி செல்லுபடியாகும் என்பதுதான் நமக்குப் புரியவில்லை. எது எப்படியிருப்பினும் இந்தி அனைத்திந்திய ஆட்சிமொழியாவது கூடாதது—இயலாதது—இடர்தருவது என்பதை அமைச்சர் போன்றோர் உணர்தல் வேண்டும்.

## (உ) இந்தித்திணிப்பின் கடுமை குறையுமாம் !

“இந்தியாவின் பொதுமொழிபற்றி எவ்விதக் கடுமையோ கண்டிப்போ இல்லாமல் வளைந்து கொடுக்கும் தன்மையில் படிப்படியாகச் சென்று பொதுமக்களின் ஒப்புதலின் மீதே ஒரு முடிவு செய்யப்படும்” என்று கடந்த 6-1-58-இல் சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகத்தில் பேசிய காலை இந்திய முதன்மை அமைச்சர் பண்டித சவகர்லால் நேரு கூறினார்.

**குறிப்பு :** இவ்வளவு காலங்கடந்தேனும், மக்களின் எதிர்ப்புணர்ச்சியை அறிந்து இந்தித்திணிப்பில் இத்துணை மனமாற்றம் கொண்டது பற்றி மகிழ்ச்சியே. ஆனால் இந்தித் திணிப்பின் ஆணிவேர் அறும்வரை தமிழக மாந்தர் தமது எதிர்ப்பினைக் கைவிடார்.

## (ங) இராசகோபாலாச்சாரியாரின் இந்தி எதிர்ப்பு முழக்கம்

“இந்தி எதிர்ப்புப் போர் இப்பொழுதுதான் ஆரம்பமாகியிருக்கிறது. ஆகையால் தென்னாட்டில் இருக்கும் மக்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து ஒருமுகமாக இருந்து போராடவேண்டும். அவ்விதம் நடந்துகொண்டால் போராட்டத்தில் வெற்றி காணலாம். விரும்பாத மக்கள்மீது இந்தியைத் திணிப்பது கூடாது என்பதே பிரதம மந்திரி ஸ்ரீ நேருவின் கருத்து. கௌகத்தி காங்கிரசில் நிறைவேற்றப்பட்டுள்ள மொழிபற்றிய தீர்மானம் தென்னிந்தியாவுக்கு வெற்றி என்று நினைப்பது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகும். அரசியல் சட்டத்தில் உள்ளதைத்தான் அத்தீர்மானம் விளக்கமாகக் கூறுகிறது.” என்று கடந்த 23-1-58-இல் லட்சுமிபுரம் இளைஞர் கழகத்தில் பேசியபோது திரு. இராசகோபாலாச்சாரியார் குறிப்பிட்டார்.

**குறிப்பு :** கௌகத்தி காங்கிரசில் நிறைவேறிய தீர்மானம் ஆச்சாரியாரவர்களின் கருத்துப்படி, ஒரு கண்துடைப்பு என்றே சொல்லவேண்டும். எதிர்காலத்தில் இந்தி ஆதிக்கம் வளரவே

வடநாட்டுக் காங்கிரசார் வழி வருகின்றனர். எனவே நாம் இந்தி பொதுமொழியாவதை எக்காலத்திலும் - எவ்விதத்திலும் - எந்த உருவத்திலும் அனுமதித்தல் கூடாது.

### (ச) ஆங்கிலமே பொதுமொழி ஆதற்குரியது : கருனடகப் பெருமக்கள் கருத்து

மைசூர் முன்னுள் திவான் திரு. என். மாதவராவ் உள்ளிட்ட 13 கர்னடகப் பெருமக்கள் அண்மையில் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளனர். அதில், "அரசியல் சட்டத்தில் கண்ட 14 மொழிகளைத் தேசிய மொழிகள் என விளக்குவதை நாங்கள் மறுக்கிறோம். இதற்கு அரசியல் சட்ட ஒப்புதல் ஏதும் கிடையாது. எங்கள் கருத்துப்படி நாடெங்கும் பரவியுள்ள மொழி ஒன்றே ஒன்றுதான். அதுதான் ஆங்கிலம்; ஆங்கிலத்தை எடுத்துவிட்டு அதற்குப் பதில் இந்தியைப் புகுத்துவது மிக முதன்மையான செய்தியல்ல. இந்தியைத் துரிதமாகப் புகுத்துவது பொதுமக்களின் கருத்தை வேறு வழியில் திருப்புவதாகும். இதனுல் ஒற்றுமைக்குப் பதில் வேற்றுமைதான் வளர இடமேற்படும். தேசீய ஒற்றுமை, திறமையான முன்னேற்றம் ஆகியவற்றை முன்னிட்டு ஆங்கிலமே மைய அரசியலாரின் ஆட்சிமொழியாக நீடித்திருக்க வேண்டும் எனக் கரு துகிறோம். இதற்காக அரசியலமைப்புச் சட்டத்தில் ஒரு திருத்தம் செய்யவேண்டும் என வற்புறுத்துகிறோம். ஏனெனில் அத்தகைய திருத்தம் இல்லாவிடில் இந்திமொழி பேசப்படாத பகுதி மக்கள் தங்களின் நலன் பாதுகாக்கப்படுவதாகக் கருத இயலாது" என்று கூறியுள்ளார்கள்.

**குறிப்பு**: அந்தந்த மாநிலமொழியை அந்தந்த மாநில ஆட்சி மொழியாகவும் ஆங்கிலத்தைப் பொதுமொழியாகவும் வைத்துக் கொள்வதே சாலச் சிறந்ததென்பது நடுநிலைநின்று ஆராயும் பல அறிஞர்களின் கருத்து. அக்கருத்தினை யொப்பவே கருனடகப் பெருமக்களின் கருத்தும் இருப்பது வரவேற்கத் தக்கதே. ஆனுல் இந்தி வெறியர்கள் என்ன கருதுகிறுர்களோ தெரியவில்லை. இந்தி பொதுமொழி என இனியும் பேசப்படுமானுல் கருனடகத் தலைவர்கள் கருதுவதுபோல் நாட்டில் ஒற்றுமைக்குப் பதில் வேற்றுமைகளே வளரும் என்பதில் ஐயமில்லை.

### (ரு) இந்தி பற்றி டாக்டர் சுப்பராயன் அவர்களின் கருத்து

1—2—58-இல் கோவை அரசினர் கலைக் கல்லூரி ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கிய டாக்டர் சுப்பராயன் அவர்கள் பேசுங்காலை, "இந்தி பேசாத பகுதிகள்மீது இந்தியைத் திணித்தால் நாட்டின் ஒற்றுமைக்கு ஆபத்து ஏற்படும். யார் இந்தியை ஆதரிப்பதாகக் கூறுகிறுர்களோ அவர்கள்தாம் அதன் விரோதிகள். இந்தி பேசப்படும் பகுதிகளில்கூட பல மொழிகள் பேசப்படுகின்றன. இந்தியாவில் 100-க்கு 42 பேர் இந்தி பேசுகிறவர்கள் என்று கூறப்படுவதைக்கூட என்னுல் நம்பமுடியவில்லை. இன்னும் பல ஆண்டுகளுக்கு ஆங்கிலத்தையே நாம் அரசாங்க மொழியாக வைத்துக்கொள்ளவேண்டும். தற்போது நாட்டின் ஒற்றுமையே முதன்மையானது," என்று பேசியுள்ளார்.

**குறிப்பு**: தமிழ்நாடு—தமிழ்மொழி என்பனவற்றிடம் கொண்டுள்ள பற்றைவிட இந்தியா என்னும் இத் துணைக் கண்டத்தினிடம் அதிகப்

பற்றுகொண்டு அதன் ஒற்றுமையைக் காரணமாகக் காட்டி, அதன் மூல மாவது தமிழகத்தில் இந்தியின் ஆதிக்கம் பரவவொட்டாது செய்ய நினைக்கும் டாக்டரின் பரந்த மனப்பான்மையைப் பாராட்டுகிறோம்! ஆனால் வடநாட்டார் இந்திமொழியின் ஏற்றந்தான் நாட்டின் ஒற்றுமை—சுதந்திரம்—என்றெல்லாம் கருதுகின்றனர். இந்த எண்ணத்திற்குத் தமிழகம் இடந்தரலாமா? தந்தால் அதன் விளைவு என்னாகும் என்பன போன்ற செய்திகளை, டாக்டர் போன்ற பெருமக்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக!

---

# மதிப்புரை

**“சம்பந்தரும் சமணரும்”**

[இதன் ஆசிரியர்: பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர்கள். இதன் விலை ரூபா. 2—75. பதிப்பாளர்: ருத்திரா பதிப்பகம் 36/37, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1.]

இந்நூல் தொன்மைச் செந்தமிழர்கள்தம் நன்னெறிக் கொள்கையினை நன்கெடுத்து விளக்கும் நயனார் பயன் நூல். தொன்மைத் தமிழர் வழிபாடு சிறப்பென்னும் செம்பொருள் வழிபாடாகும். அதுவே சிவ வழிபாடு; அதுவே சைவ வழிபாடு. அவ்வழிபாடு வடபெருங்கல்லாகிய இமயம் முதல் தென்பெருங்கல்லாகிய கடல்கொண்டொழித்த குமரிக் கோடுவரை பரந்துபட்ட இப்பாதகண்ட முழுவதும் தனிப்பெருங் கோளாகப் பரவியிருந்தது. அயலவர் மயல்சேர் மாசு கலவாத முன் நிலையில் அக்கொள்கை தூயதாய் மிளிர்ந்தது; அக்கொள்கைக்கு உடலுயிராக வயங்கியது கொல்லாமையும் ஊன் உண்ணாமையும் ஆகும். அயலவர் புகுத்திய மாசு கொலையும் புலையும் ஆகும் என்னும் உண்மைகளை அகப்புறச் சான்றுகளுடன் ஆசிரியரவர்கள் பன்மொழிப் புலமையுடன் அறிவு ஆராய்வு நுண்மாண் நுழைபுலம் ஒருங்கமைந்த தம் பெருந் திறல் பொதுள நிலைநாட்டியுள்ளார்கள். அம்மாசினை யகற்றிப் பண்டைத் தூய்மையினை நிலைநாட்டும் பெருஞ்சீர் திருத்தத்தினைச் செய்யவே புத்தர் பெருமானும் மாவீரரும் ஏறத்தாழ ஈராயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகளுக்கு முன் இறையருளால் தோன்றினர். அத்திருத்தங்களைச் செவ்வையாகச் செய்து நாட்டுக்கு நலம்புரிந்தனர்.

பின்பு இவ்விரு பேரருளாளர் கொள்கையினைப் பின்பற்றியவர்களால் முறையே ‘புத்தம் சமணம்’ என்னும் இருவேறு சமயங்கள் படைக்கப்பட்டன. போலித்துறவும் உலகுக்கு ஒவ்வாப்போலி ஒழுக்கமும் விழுமியதெனக் கைக்கொண்டு ஒழுகுவாராயினர். இப்புன்மை ஒழுக்கத்தால் நாட்டில் குழப்பமும் பொய்ம்மையும், பூசலும் மிகுவவாயின. அவற்றை அகற்றிப் பண்டைப் பயனார் நன்னெறியினை நிலைநாட்டச் சம்பந்தப்பெருமானும், நாவுக்கரசரும் திருவருளால் தோன்றியருளினர். அப்புன்மைகளை அகற்றி நன்மைகளை நாடெங்கும் பரப்பியருளினர். அம்மட்டோ? சமணர்களையும் சால்புறவே பேணினர். இதற்கு மாறாகக் கழுவேற்றினார் என்னும் பிற்காலத்தெழுந்த பொய்ம்மைப் புனைகதைக்கு ஏதொரு சான்றும் தேவாரத்தின்கண் காணக்கிடைத்திலது. தேவாரத்திற்குப்பின் ஐந்நூறு அல்லது அறுநூறு ஆண்டுகளுக்குப் பின்னெழுந்த

நூல்களிற்றான் காணக்கிடக்கின்றது என்னும் உண்மைகளையும் பல வலிய சான்றுகளுடன் விளக்கியுள்ளார்கள். எனவே இவ்வரும் பெரு நூல் உண்மைச் சைவர்கட்கும் உண்மைச் சமணர்கட்கும் தொன்மைச் சிவநெறியின் நன்மை காட்டும் நலமுடையது. சேக்கிழாரடிகளும் இவ் வுண்மையினை இலைமறை காய்போல் விளக்கியுள்ளார்கள் எனவும் கூறியுள்ளார்கள். இதனையும் ஆராய்ந்து உண்மை காண்பார்கள். இந்நூலைப் பழமை நாடும் கிழமையரும் புதுமை நாடும் பொற்பினருமாகிய அனைவரும் வாங்கிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

**“ குமரகுருபரன் ஆண்டு மலர் ”** [ஸ்ரீவைகுண்டம், விலை காசு 25.]

ஆண்டு மலர் வரப்பெற்றோம். நம் குமரகுருபரன் செந்தமிழ் மொழிக்கும் சிவநெறிக் கொள்கைக்கும் இடையறாது ஆற்றிவருந் தொண்டு அளப்பில. இன்னும் அவனது கட்டிளமைப் பருவத்தே திருமந்திர ஆங்கிலமொழி பெயர்ப்பும், பண்டாரமும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை போன்ற சீர்சால் பனுவல்களின் நுண்ணுரையும், இன்னும் பலவேறு வரலாறுகளும், பொருள் நிறை கட்டுரைகளும், புதுப்பாடல்களும், இசைப்பகுதி, மருத்துவப் பகுதி முதலியவைகளும் பன்மொழிப் புலமையும் நன்னெறி ஒழுக்கமும் நன்கமைந்த ஆன்றோர்களால் அழகுறவரையப்பட்டு நாட்டிற்கணியெனத் தாங்கிவருகின்றனன்.

அக்குமரகுருபரனுக்கு எட்டாவதாண்டு நிறைந்து ஒன்பதாவதாண்டு துவங்குகின்றது. அவன் அம்மையப்பர் திருவருளால் செம்மை நலம் எய்திப் பல்லாண்டு வாழ்ந்து பயன்பணி பல புரிந்து நீடுவாழ வாழ்த்துகின்றோம்.

**“ வள்ளுவர் வகுத்த தெய்வம் ”**

[இதன் ஆசிரியர் கணக்காயர், புலவர், செந்துறைமுத்து அவர்கள். இதன் விலை ரூபா 1. கிடைக்குமிடம் மலர் நிலையம், 133. பிராட்வே, சென்னை-1.]

திருவள்ளுவநாயனார் திருவுள்ளத்தினை அவர்தம் பெருநூல் கொண்டு உய்த்துணர்வதே ஏற்புடையதாகும். அம்முறையாகத்தான் ஒவ்வொருவரும் உணர்ந்துவருகின்றனர்; உணர்த்தியும் வருகின்றனர். அம்முறையில் இந்நூலாசிரியரவர்களும் செம்மையாக ஆய்ந்து தொடர்ப்படுத்தி வரைந்துள்ளார்கள். பழந்தமிழர் சிறந்த வழிபாட்டுக் கிழமையாக மேற்கொண்டொழுகியது பகலவன் வடிவிற் காணப்படும் அலகிலா அறிவுப் பேரொளியினையே என்பது தெளிவு. அதனையே ஆசிரியர் விளக்குகின்றார் என எண்ணுதல் நன்று. இந்நூல் ஆய்வார்க்கு ஒரு புத்துணர்ச்சியினை விளைவிக்கும். அதனால் அனைவரும் வாங்கிக் கற்பது உண்மை காண்பதற்கு வாயிலாகும். “பகலவன் முதற்றே உலகு” எனப் பாடம் இருப்பினும் பழுதின்றென்ப. இது, “வேண்டுதல் வேண்டாமை” போன்ற வகையுளியாகும்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

# முதலாவது சிற்றிலக்கிய மாநாடு



பேராசிரியர், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள்
தலைமையுரை நிகழ்த்துதல்



டாக்டர் மு. வரதராசனார் அவர்கள்
மறைமலையடிகள் படத்தைத் திறந்துவைத்துப் பேசுதல்